# ராஜாஜி
## மணிமொழிகள்



முல்லை முத்தையா
தொகுத்தது




தியாகராய நகரம் :: சென்னை-17.

# ராஜாஜி மணிமொழிகள்

1

விஞ்ஞானம், கணிதம், அல்லது மனித ஒழுக்கம் சம்பந்தமாகப் புதிய விஷயங்களைக் கண்டு பிடிப்போருக்கு ஒரு கஷ்டம் உண்டு. தாங்கள் கண்டுபிடித்ததை அஞ்ஞானம் நிறைந்த இவ்வுலகில் எவ்விதம் அனுஷ்டானத்துக்கு கொண்டு வருவது என்பதுதான் அந்தக் கஷ்டமாகும்.

2

வாய்மொழி உபசாரத்தால் பலன் கிடையாது. செயலில் உதவிகள் புரியவேண்டும். தனிப்பட்டவர்களின் நாணயத்தைப் பற்றிச் சந்தேகிக்கும் நிலைமை ஒழிந்து ஒருவரை யொருவர் பூரணமாக நம்புங்காலம் எப்போது தான் வருமோ? அந்தக் காலம் வந்தால்தான் நாம் உருப்படியாக எதுவும் செய்யமுடியும்.

3

சாஸ்திரங்களால் என்ன பயன் என்று சிலர் கேட்கிறார்கள். உண்மையில் அவை அறிவுப் பொக்கிஷங்கள். நம் நன்மைக்காகவே அவை ஏற்பட்டுள்ளன. இந்த விலை மதிக்கமுடியாத பெரும் சொத்துக்களான சாஸ்திரங்கள் இல்லாவிட்டால் நாம் இன்றுள்ள நிலையில்கூட இருந்திருக்க மாட்டோம். அவற்றில் உள்ள உபதேசங்களை நாம் கடைப் பிடிக்கும் போதுதான் உண்மையான தார்மீக வாழ்க்கை நடத்த முடியும்.

4

தங்கள் சொந்த நலன்களை மறந்து பொது நலனையும் தேசிய நலனையும் பிரதானமாகக் கருதக் கூடிய நிலைமை கூடிய சீக்கிரமே வரும் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.

5

விவாதத்தில் எல்லோருமே குறைகளை எடுத்துக் கூறலாம். கொள்கை பற்றித் தீர்மானித்து விட்டால் குறை கூறுவதும் தவறுகளைக் கண்டுபிடிப்பதும் சுலபம்.

6

கவிஞர்கள் சட்டசபை மெம்பர்கள் அல்ல; விவாத அரங்கு மெம்பர்களும் அல்ல. உள்ளத்தில் சிந்தனைக் கதிர்களும் உத்வேகங்களும் மாறி மாறி எழுந்து கொண்டே இருக்கின்ற இயல்பைப் படைத்தவர்கள். கண்ணைக் கவரும் பல வர்ணங்களைக் கொண்ட நூல்களைச் சேர்த்து ஒரே உடையாக நெசவு செய்யப்படுகின்ற உடைக்குச் சமமே கவிதைகள். மேக வர்ணம் என்று அது வழங்கப்படுகிறது. கவிதையை வானவில்லுக்குச் சமமாகவும் கருதலாம்,

7

துக்கப்படுவது எந்தப் பிரச்னையையும் தீர்த்து விடாது.

8

நிர்வாகம் நல்லதாக இருந்தால் யார் மந்திரியாக வந்தால் என்ன? மந்திரிகள் வருவார்கள் போவார்கள். ஆனால் நிர்வாகத்தினர் நல்ல வேலை செய்தால் மக்கள் நல்ல மகிழ்ச்சி அடைவார்கள். கிளார்க்குகளாகட்டும் சூப்பிரண்டுகளாகட்டும் அல்லது காரியதரிசிகளாகட்டும் அனைவரும்

பயமோ பாரபட்சமோ இன்றி ஹைகோர்ட் நீதிபதிகளைப் போல் வேலைகளைச் செய்யவேண்டும்.

9

செக்ரடேரியேட்டில் சராசரி 3 கிளார்க்குகளுக்கு ஒரு சூப்பிரண்டு வீதம் இருப்பதாகக் கேள்விப்பட்டு நான் ஆச்சரியம் அடைந்தேன். இவ்வளவு நாளாக இந்த முக்கிய விஷயம் எனக்குத் தெரியாதிருந்தது. 3 பேரை வழிநடத்த ஒருவர் வேண்டுமா? கல்வி விதிகளின்படி 30 மாணவர்களைக் கவனிக்க ஒரு உபாத்தியாயர் போதும். பாமர மனிதன் என்ன நினைப்பான்? பள்ளிக்கூட மாணவனைவிட ஒவ்வொரு கிளார்க்கும் பத்து மடங்கு விஷமம் பண்ணுகிறார் அல்லது பள்ளிச் சிறுவனைவிட பத்துமடங்கு மந்தம் என்றுதான் நினைப்பான்.

10

வாழ்க்கை ஒரு அலாதியான நியதியின் பிரகாரம் வழக்கப்படி நடந்து கொண்டுதான் இருக்கும். நெடுநாள் பழக்க வழக்கங்கள் சம்பிரதாயங்கள் ஆகியவைகளை அனுசரித்து வாழ்க்கை நடக்கிறதே அல்லாது மனிதன் இயற்றும் சட்டதிட்டங்களினாலும் வாக்கு வாதங்களினாலும் அல்ல.

11

முன்னெல்லாம் சிறியதாக எதையுமே செய்ததில்லை. அஜந்தா, புத்தகயா மைசூர் குகைக் கோயில்களைப் பாருங்கள். முன்னெல்லாம் மனம் விரிவாக இருந்தது. அவகாசமும் வேலை செய்யச் சக்தியும் இருந்தது. இப்பொழுது நாம் ரொம்பச் சுறுசுறுப்பாயிருக்கிறோம்; ஆனால் செய்வதென்னமோ ஒன்றுமில்லை. செய்ய முயற்சிக்கிறோம்; ஆனால் சாதனை சிறியதாயிருக்கிறது.

12

வீணுகப் புகழ்ச்சி செய்தல் கூடாது. உள்ளதை உள்ள படியே உரைக்கவேண்டும். அதிகார வர்க்கம் ஒழிந்து, ஜனநாயகம் ஏற்பட்டவுடனேயே வெறும் புகழ்ச்சியும் ஒழிந்திருக்க வேண்டும்.

13

எழுதப் படிக்கத் தெரியாத பாமரமக்கள் எவ்விதம் உழைத்து எத்தகைய அழகிய பொருட்களை சிருஷ்டிக் கிருர்கள் என்பதை நாம் உணர வேண்டும். பிறகு பள்ளிக் கூடத்தை மறந்துவிட்டு இந்தக் கலைத் தொழிலில் நாம் ஈடு படுவது திண்ணம். அது போன்ற அழகான பொருட்கள் தான் உண்மையான செல்வமாகும்.

14

மின்சார நிலையம் வேலைசெய்யாவிடில் விளக்கு எரி யாது; இருட்டு வந்துவிடும். இருட்டில் ஒருவரை ஒருவர் குறை சொல்வதால் மாத்திரம் வெளிச்சம் தோன்ருது. அதேபோல மக்கள் அனைவரும் நியாய புத்தியுடன் நல்ல வர்களாக நடந்துகொள்ளாவிடில், ஜனநாயகத்தால் பலன் ஏற்படாது. பத்திரிகைகளில் காரசாரமாய் எழுதுவ தாலும், மேடைப் பிரசங்கங்களாலும் மக்களுக்கு நல்வாழ்வு அளித்துவிட முடியாது.

15

வாக்காளரிடையே ஒழுக்கக் குறைவு மக்களிடையே கெட்டகுணம் ஆகியவற்ருல்தான் ஜனநாயகத்துக்கு இடை யூறு ஏற்படும். ஒரு கோவிலோ மகுடியோ, சட்ட வரம் புக்குட்பட்ட அதிபதியோ இருப்பதால், ஜனநாயகத்திற்கு இடையூறு ஏற்படாது. ஜனநாயக அரசாங்கத்தில். ஆட்சி

பீடத்தில் இருப்பவர்களால் தீமை ஏற்படாது. ஜனங்களின் நடத்தையால்தான் தீமை ஏற்பட முடியும்.

16

ஒரு யதேச்சாதிகாரி நல்லவனுயிருந்தால், மக்களின் குணம் எப்படியிருந்தாலும், நல்லாட்சியை நடத்த அவனுல் முடியும். ஆனுல் ஜனநாயக ஆட்சியிலோ, மக்கள் நல்லவர்களாக இல்லாவிடில், அவர்களுக்கு நல்வாழ்வு அளிக்க ஒரு வழியும் கிடையாது.

17

புத்தகம் படித்தோ, அனுபவஸ்தர்களின் உபதேசங்களைக் கேட்டோ நாம் அறிவு பெறமுடியும். நம்நாட்டுப் பண்டைய தத்துவ சாஸ்திரங்களைப் படித்து நாம் தத்துவ ஞானம் பெறமுடியும். ஆனுல் வாக்காளருக்கு (மக்களுக்கு) நற்குணம் இல்லாவிடில் நல்ல ஆட்சி ஏற்படவே முடியாது.

18

நாம் கஷ்டப்பட்டு மனச்சாட்சிக்கு நியாயமாகப் பக்தி சிரத்தையுடன் உழைத்தாலன்றி வெற்றி பெறமுடியாது. ஆசை இருந்தால்மட்டும் போதாது. லட்சியத்தில் பக்தி வேண்டும். பெரும் முயற்சிகள் அனைத்துக்கும் சிரத்தை தேவை.

19

ஒழுங்கீனம், குறும்பு, முணுமுணுத்தல், அர்த்தமில்லாத ஆத்திரம் இவற்ருல் ஒன்றும் பலன் கிடைக்கப் போவதில்லை. நாம் எக்காரியத்திலும் நிதானமாக ஈடுபட வேண்டும். இதயத்தில் தெய்வ பக்தி உடையவன் யாரும் குழப்பம் செய்ய வேண்டும் என்ற துராசைக்கு அடிமையாகமாட்டான், பொறுப்பில் சிரத்தை கொள்வது ஒரு

வகையான பக்திதானே? பக்திதான் வணக்கம். உங்கள் வேலையில் நீங்கள் பக்தி கொள்வீர்களானால் அதுதான் கடவுளை வணங்குவதாகும்.

20

பல்லாயிரக் கணக்கான வருஷங்களாக இந்தியாவைப் பாதுகாத்து வந்த நம் தத்துவமும், கலாசாரமும், மக்கள் மனத்தில் அப்படியே இருந்திருந்தால் நம் கலாசாலைகளின் குறைபாடுகள் நம்மைப் பிரமாதமாக பாதித்துவிடாது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவை இன்று இல்லவே யில்லை என்று நான் அஞ்சுகிறேன். நம் வேதாந்த தத்துவமும் கலாசாரமும் மக்கள் மனத்தில் இருந்தால் இன்று இவ்வளவு பேராசையும் சுயநலமும் தாண்டவமாடாது.

21

இந்தியாவின் பண்டைத் தொழில் முறை அதிர்ஷ்டவசமாகப் பாதுகாக்கப்பட்டு வந்திருக்கிறது. பெரும்பாலான குழந்தைகள் இன்னமும் தங்கள் தாய் தந்தையர் செய்யும் தொழிலில் அவர்களுக்கு உதவி செய்து பள்ளிக்கூடத்திற்குச் செல்லாமலேயே அந்தத் தொழிலைக் கற்கின்றனர். ஏழை மக்கள் பெரியவர்களின் ஆசைகளையும் லட்சியங்களையும் அறியாமல் தங்கள் போக்கில் பணி செய்து வருகின்றனர். அதனால்தான் நாமும் ஜீவித்திருக்கிறோம். நாம் வாழும் வீட்டை எளிய மக்கள் அப்படியே பாதுகாத்து வைத்திருப்பதால் நாம் ஆகாயக் கோட்டைகள் கட்ட முடிகிறது. எளிய மக்களின் குடும்பங்கள், குடும்பங்களாக இருப்பதோடு சிறுவர்களுக்குத் தொழில் பள்ளிக்கூடங்களாகவும் விளங்குகின்றன.

22

தமிழ் நாட்டை இன்னும் கொஞ்சம் மேம்படச் செய்ய நாம் யோசிக்கவேண்டும். ஒருவரோடு ஒருவர் தோழர்

களாகக் கங்கணம் கட்டிக்கொண்டு போட்டிகளையும் வெறுப்புகளையும் தள்ள வேண்டும். தமிழ்நாட்டு ஆண்களும் பெண்களும் மிக நல்லவர்கள், பொய்யும் பித்தலாட்டமும் அவர்களிடம் கிடையாது. அவர்கள் புத்திசாலிகள், நகைச்சுவை பொங்கி யொழுகப் படைத்தவர்கள். படபடப்புக் கிடையாது, அகம்பாவம் இல்லை, துன்மார்க்கத்தை வெறுக்கிறார்கள். அவர்களை எப்போதும் நம்பலாம் என்று நம்முடைய நாட்டுக்குப் பெயர் சம்பாதிக்கவேண்டும். இது கஷ்டமில்லை ஆண்டவனை வேண்டிக்கொண்டால் நிச்சயமாக எல்லாம் உண்டாகும். உள்ளமுருக வேண்டிக் கொண்டால் நிச்சயமாக உண்டாகும். அவரவர் தம்மையே பார்த்துக்கொள்ள வேண்டும். பிறர் குற்றத்தைக் கவனிப்பதில் பயனில்லை.

23

பொதுவாகத் தொழிலாளர் செய்யும் வேலையென்று கருதப்படும் தொழில்களை நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த குழந்தைகள் ஏற்க முன்வரவில்லையென்றால் நடுத்தர வர்க்கத்தின் அளவு அதிகரித்துக்கொண்டே போகும். கட்டுப்பாடு இல்லாமல் ஜனத்தொகை அதிகரித்துக்கொண்டே போய் அதற்கேற்றபடி உத்தியோகங்கள் அதிகரிக்கவில்லையென்றால், வேலையில்லாத் திண்டாட்டம்தான் ஏற்படும்.

24

நடுத்தர வர்க்கத்தை உண்மையான நடுத்தர வர்க்கமாக நாம் செய்யவேண்டும். அதை ஒரு தனி ஜாதியாக்கக் கூடாது. தொழிலாளர் செய்யும் வேலைகளை நடுத்தர வர்க்கக் குழந்தைகள் செய்யவேண்டும். நடுத்தரவர்க்கத்தவருக்கு வேலை [illegible] இது ஒன்றுதான் வழி. இது சாதாரணக் கணக்கு.

25

ஜனத்தொகை வளர்ச்சிக்கேற்ப எந்த வேலைகளும் அதிகரிக்கின்றன. தொழிலாளர் முன்னைக் காட்டிலும் இப்பொழுது சௌக்கியமாக இருக்கின்றனர். மத்திய வர்க்கத்தினர் எந்த அளவுக்குப் பொருளாதாரக் கஷ்டத்திற்கு உள்ளாகி இருக்கின்றனரோ அந்த அளவுக்குத் தொழிலாளர் நிலையில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது. கிராமாந்தரப் பிரதேசங்களில் குடியானவர்கள் சௌக்கியமாக இருக்கின்றனர்.

26

எந்தச் சமூகத்திலும் நடுத்தர வர்க்கத்தினர் செய்யும் வேலைகள் மிகவும் குறைவு. ஜனத்தொகைப் பெருக்கத்திற்கு ஏற்றபடி இந்த வேலைகள் அதிகரிப்பதில்லை. இதனால் வேலையில்லாத் திண்டாட்டம், சோம்பேறித்தனம், பிறரை நம்பியிருக்கும் அடிமைத்தனம் முதலியவை வளர்கின்றன.

27

குழந்தைகள் ஒரு சள்ளையாக இருப்பதாகவும், அவர்களைப் பள்ளிக்கூட ஆசிரியர்களிடம் ஒப்படைத்துவிட வேண்டுமென்றுதான் பொதுவாகப் பெற்றோர் நினைக்கின்றனர். ஆகையால் என் கருத்தை விஸ்தரிக்கவில்லை. ஆனால் நீங்கள் நினைப்பதைக் காட்டிலும் அதில் அதிகக் கருத்து இருக்கிறது. வேலைகள் பலவிதம். மரவேலை செய்பவன், க்ஷவரம் செய்பவன், செருப்புத் தைப்பவன் முதலியவர்கள் அவசியம் வேண்டும். சில ஜீவாதாரமான தொழில்கள் நடந்து வருவதால்தான் சமூகத்தில் பல விஷயங்கள் இடைவிடாமல் நடந்து வருகின்றன. இந்தத் தொழில்களில் பயிற்சி அளிக்கப் பள்ளிக்கூடங்கள் இல்லை. ஆகையால்

இவர்கள் தங்கள் குடும்பத் தொழில்களில் வீட்டிலேயே தான் பயிற்சி பெறவேண்டும். பிறநாடுகளில் தொழில் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. நம் நாட்டில்...........?

28

பாமரர்களை வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் வழி நடத்திச் செல்பவர்களே தலைவர்கள். வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் தலைவராவதற்குச் சந்தர்ப்பமுண்டு. புத்திசாலித்தனமும் பயிற்சியும் நாகரிகமும் உள்ள இளைஞர்கள் பள்ளியிலோ, வயலிலோ அல்லது சமூக வட்டாரத்திலோ தலைவர்களாக முடியும். தலைமைப் பதவி என்றால் அரசியலை மட்டும் குறிக்காது.

29

நடுத்தர வர்க்க மக்களின் கஷ்டத்தைக் குறைக்க வேண்டும். ஜாதி உணர்ச்சியினால் நிலைமை இன்னமும் மோசமாகி விடுகிறது. மத்திய வர்க்கத்தினரை வேலை செய்யத் தூண்ட என்னால் முடியவில்லையென்றால் ஜாதி உணர்ச்சிதான் அதற்குக் காரணம். உடம்பை உழைத்து வேலை செய்ய விருப்பமில்லாமலிருப்பது ஜாதி உணர்ச்சியின் மிக மோசமான அம்சம்.

30

ஜனநாயகம் என்பது தனித்தனியான கற்கள் அடங்கிய கல் குவியலல்ல. அது கற்களால் கட்டப்பட்ட வீடாகும். அந்தக் கற்கள் கட்டுப்பாடு ஒழுங்கு ஆகிய சிமெண்டின் உதவியினால் ஒன்றோடொன்று ஒழுங்காக ஒட்டிக்கொண்டு பலத்துடன் நிற்கின்றன. அந்தக் கற்கள் அதே மாதிரி ஒன்றாக ஒட்டியிருக்கும்படி நீங்கள் பார்த்துக் கொள்ளவேண்டும். நாம் எப்போதாவது வீட்டைப் பழுது பார்க்க விரும்பினால் வீட்டையே இடித்துத் தள்ளிவிடுவ

தில்லை. படங்கள், ஜன்னல் துணிகள் முதலியவற்றை ஜாக்கிரதையாக அப்புறப்படுத்துகிறோம். பழுது பார்த்த பின் திரும்ப அவைகள் முன்பிருந்த இடத்தில் வைக்கிறோம். அதேபோல் நாமும் அவ்வப்போது வருஷத்திற்கு ஒரு முறைகூட சுயராஜ்ய வீட்டைப் பழுது பார்க்கவேண்டும். ஆனால் இதை நாசுக்காகச் செய்யவேண்டும்.

31

சமயம் ஒரு யுத்த கோஷமாகக் கூடாது. சகல ஜீவராசிகளுடனும் அன்பு, கருணை, நேசப் பான்மை, ஒத்துழைப்புகளுடன் பழக ஒரு கோஷமாக வேண்டும்.

32

சமயம் என்பது அழியா அமிருதம். மதத்தைப் பிற காரியத்துக்குப் பயன்படுத்தி அதை நஞ்சாக்க வேண்டாம்.

33

சுதந்திரம் பெற்ற பின்னர் "இது ஒழிக!" "அது ஒழிக!" என்ற கோஷங்களெல்லாம் ஒழியவேண்டும். அதற்குப் பதிலாக "ஓங்குக!" என்ற சொல்லே ஓங்க வேண்டும்.

34

மனிதனின் கல்வியறிவு வளரப் படிப்பு ஒன்று தான் உதவி செய்கிறதென்று நினைப்பது தவறு. எந்தக் கல்வித் திட்டத்திலும் உடல் உழைப்பு மிக முக்கியம்.

குழந்தைப் பருவத்தில், வெளி உலகம் பற்றி மனத்திற்குள் நிகழும் நிகழ்ச்சிகளினால்தான் அறிவு வளர்கிறது. எழுதப்பட்ட குறிகளில் அளவு கடந்து கவனம் செலுத்துவதைவிட, வேலை, விளையாட்டு ஆகியவற்றின் மூலம்தான்

இம்மனே நிகழ்ச்சிகள் அதிகம் ஏற்படுகின்றன. பிற்காலத்திலும், படிக்கும் புத்தகங்களுக்கும், கேட்கும் பிரசங்கங்களுக்கும் உதவியாக வெளியுலகத்துடன் மாணவர்களுக்குப் பிரத்யக்ஷமாகத் தொடர்பு ஏற்படவேண்டும்.

35

இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்தில் பங்கெடுத்துக் கொண்டவர்கள் தாங்கள் செய்த தியாகங்களைப் பற்றியே மீண்டும் சொல்லிக்கொண் டிருந்தால் கடன்காரர்களை ஜனங்கள் எப்படி வெறுக்க ஆரம்பிக்கிறார்களோ அதேமாதிரி தியாகிகளையும் ஜனங்கள் வெறுக்க ஆரம்பித்து விடுவார்கள். உலக நாடுகளில் இந்தியா இன்று உயர்ந்த ஸ்தானத்தை அடைந்திருக்கிறது. நாம் அடைந்துள்ள இந்த உயர்ந்த நிலைக்கு ஏற்ப இனிமேல் நாம் நடந்துகொண்டு இப்பதவியைப் பெறத் தகுதியுள்ளவர்கள் தான் என்று நிரூபிக்க வேண்டும். பழங்காலத் தியாகங்களைப் பற்றியே திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண் டிருந்தால் மட்டும் போதாது.

36

பழைய காலங்களில் சமூக சேவையில் ஈடுபடுவது, சர்க்காரின் தயவையும் கௌரவப் பட்டங்களையும் பெறுவதற்கு முதற்படியாக கருதப்பட்டது என்பது எனக்குத் தெரியும். ஆனால் இப்பொழுது அவ்விதமில்லை. நாமே இப்பொழுது ஆட்சி வர்க்கம் அல்லது சர்க்காராகிவிட்டதால், சர்க்கார் மாளிகை ஜனநாயகத்தின் கோயிலாகிவிட்டது. சர்க்கார் மாளிகைக்குச் சென்று கவர்னரிடமிருந்தோ அல்லது அவரது மனைவியாரிடமிருந்தோ சமூக சேவை செய்யும் வேலையை ஏற்றுக்கொண்டுவந்தால், அந்தச் சமூகப் பணியாளரை நீங்கள் உங்களுடைய தோழராகவே கருதவேண்டும்.

37

கடவுளின் பெயரால் ஒரு சமூகம் ஒரு பண்டிகையைக் கொண்டாடும் பொழுதும் உபவாசம் அனுஷ்டிக்கும் பொழுதும் மனதில் பிரகாசமும் நல்ல எண்ணமும் ஏற்படு கிறது. நமது சகோதர சமூகம் கடவுளின் பெயரால் பண்டிகை கொண்டாடுகிற அந்தச் சந்தர்ப்பத்தை இந்தியா வின் இதர சமூகங்கள் பயன்படுத்திக்கொண்டு பரஸ்பர நல்லெண்ணத்தையும் சௌஜன்ய பாவத்தையும் ஐக்கிய பாவத்தையும் வளர்க்க முயற்சிக்க வேண்டும்.

38

நாம் படிக்கும் வேத நூல்களிலிருந்து ஆத்மிகஞானமும் அத்துடன் லௌகிக ஞானமும் கற்றுக் கொள்ளவேண்டும். நம்மிடம் பரம்பரையாக இருந்துவரும் வேதநூல்கள் லௌகிக ஞானம் போதிக்கும் புத்தகங்களே என நினைப்ப வர்களில் நான் ஒருவன். அவற்றில் கூறப்பட்டுள்ள அனைத் தும் எல்லோருக்குமாகக் கூறப்பட்டுள்ளவை அல்ல. நமக்கு ஏற்றதை நாம் தேர்ந்தெடுத்து அதில் அறிவு காண வேண்டும். தற்போதுள்ளதைப் போன்ற சமயங்களில் அது போன்ற நூல்களைப் பார்ப்பதும், படிப்பதும், படித்து நாம் மகிழ்வதும் பிறரை மகிழ்விப்பதும் அவசியம்.

39

ஒவ்வொரு புது முயற்சியும், நிறைவேறும் அபிலாஷை யும் தம்முடன் கூடவே பொறுப்புகளையும் கொண்டு வருகின்றன. ஆனால், இப்பொறுப்புகள் பற்றித் திரும்பத் திரும்ப—அதுவும் ஒரு அந்நிய பாஷையில் அளவுக்கு அதிக மாக வற்புறுத்தப்பட்டு வந்துள்ளமையால் அது பற்றிக் கூறுவதற்கே அர்த்தமில்லாது போய் விட்டதுபோலத் தோன்றுகிறது.

40

பலதரப்பட்டவர் ஒன்றுகூடி ஐக்கியப்பட்டு: அழகான முறையில் கூட்டுறவான வாழ்க்கையை நடத்த முடியுமென்ற உண்மையை உலகத்துக்கு நிரூபிக்கக்கூடிய பொறுப்பு இந்தியாவுக்கு ஏற்பட்டிருக்கிறது. சரித்திரத்தின் போக்கில் நம்பிக்கையுள்ளவர் இவ்விதம் நினைப்பார்களென்பதில் சந்தேகமில்லை. லட்சியத்தை சாதிப்பதில் சிரமங்கள் இருக்கலாம். அந்தச் சிரமம் எதில் இருக்கிறதோ அதைச் சாதிப்பதுதான் உண்மையான சாதனையாகும். இடையூறுகளைக் கண்டு நாம் மனம் தளரக்கூடாது. விளையாட்டுப் போட்டிகளில் கலந்துகொள்ளும் பந்தயக்காரர் இடையூறுகளைக் கண்டு மனம் தளர்வதில்லை. அந்த இடையூறுகளைச் சமாளிப்பதில் பன்மடங்கு ஊக்கத்துடன் வேலை செய்கின்றனர். அதுபோலவே நம் முயற்சியும் இருக்க வேண்டும்.

41

தேகப் பயிற்சி செய்தால் எப்படி உடல் உறுதி பெறுகிறதோ அதுபோல தர்மம் செய்யப் பழகிக் கொண்டால் மனமும், ஆத்மாவும் விருத்தியடையும். தர்மம் செய்யாமல் உயிர் வாழ்வோமானால் மனிதர்களாகிய நமக்கும் மிருகங்களுக்கும் என்னதான் வித்தியாசம்?

42

நம்மவருள் பல சமூகங்கள் இருக்கின்றன. ஒரே கடவுளுக்கு நாம் பல பெயர்களைக் கொடுத்திருக்கிறோம், அசைக்கமுடியாத ஒரே உண்மையைக்கொண்டுள்ள பற்பல வேதங்களைப் பற்பல பெயர்களால் அழைக்கிறோம். பரம்பரை பரம்பரையாக அந்த வேதங்களில் நாம் விசேஷப் பற்றுதல் கொண்டுள்ளோம். கடவுள் ஒன்றே. வேதம்

ஒன்றே. உண்மை ஒன்றே என்ற எண்ணம் நமக்கு எப்பொழுது ஏற்படப்போகிறது? நாம் பார்க்கும் கண்ணுடியிலுள்ள ஈரத்தை அடிக்கடி துடைத்துவிட்டு அதன் மூலம் பார்க்கவேண்டும். அதாவது நமது பார்வையை மங்க வைக்கின்ற துவேஷத்தையும் பிடிவாதத்தையும் களைந்தெரிந்து நமது மனத்தைப் பரிசுத்தமாக வைத்துக் கொண்டு விஷயங்களைச் சீர்தூக்கிப் பார்க்கவேண்டும். அந்த நிலையில்தான் நாம் விஷயங்களின் உண்மையான வடிவத்தைக் காணமுடியும். ரிஷிகளும் தத்துவ ஞானிகளும் தீர்கதரிசிகளும் அந்த நிலையில்தான் விஷயங்களைக் கவனித்தனர்.

43

நிர்வாகத் துறையிலோ சமூகத்திலோ அல்லது வேறு எந்தக் குறிப்பிட்ட வேலையிலுமோ தற்காலிகமாக ஏற்படும் கஷ்டங்களைக் கண்டு மனக் குழப்பமடைந்துவிடாதீர். நம் லட்சியம் ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது என நான் உறுதியாக நம்புகிறேன். அதை நாம் பக்தி சிரத்தையுடன் நிறைவேற்றி வைக்க வேண்டும்.

44

புழக்கத்தில் போதிய பணமில்லையே என்பதற்காகச் சோர்ந்து விடாதீர்கள். ஒரு நாட்டின் அறிவாளிகளும் தம்முன்புள்ள வேலைகளை சிரத்தையுடன் நிறைவேற்றி வைக்க அவர்களுக்குள்ள திறமையும்தான் உண்மையான செல்வம். இவ்விதச் சிரத்தை இருந்தால் வேறெவ்விதக் குறைகளையும் சீக்கிரம் பூர்த்திசெய்துவிட முடியும்.

45

பத்திரிகைகளில் யார் படம் வெளியாகிறதோ அவர் தலைவர் என்று அர்த்தமல்ல. ஒவ்வொரு கிராமத்திற்கும் ஜில்லாவுக்கும், நகரத்துக்கும், வயல் வெளியிலும், தொழிற்

சாலையிலும், வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலுமே தலை வர்கள் தேவை. இக் காலத்தில், நல்ல தலைமை இல்லா விட்டால் நாகரீகம் ஏது?

46

இயற்கை வளங்கள், வாழ்க்கை வசதிகள்—இந்த விஷயத்தில் இதர நாடுகள் பலவற்றிலுள்ள மக்களைக் காட்டிலும் நாம் எவ்வளவோ அதிர்ஷ்டசாலிகள் என்பதை மக்கள் உணருவதில்லை. நம் நாட்டு மக்கள் உலகத்தின் மற்றப் பகுதியிலுள்ளவர்களைக் காட்டிலும் அந்தரங்க சுத்தியில் குறைந்தவர்களல்லர்.

47

மனஞ்சோர்ந்து போவதிலும், காரணமின்றி நம்மை நாமே கேவலப்படுத்திக் கொள்வதிலும் ஒரு பயனுமில்லை. நம்பிக்கைத்தான் சாதனைக்கு அடிப்படை.

48

மனமொடிந்தோ கலவரம் அடைந்தோ கிடப்பவர் கள் ஒன்று செய்யவேண்டுமென்று நான் விரும்புகிறேன். நாட்டில் நம்பிக்கையையும் நமது அரசாங்கத்தின் மதிப் பையும் குறைப்பதனுல் நாம் ஏதாவது நிலைமையை அபி விருத்தி செய்கிரேமா என்ற கேள்வியை அவர்கள் தமக் குத் தாமே கேட்டுக்கொள்ளவேண்டும். நாம் உயிரோடிக்க வேண்டுமென்ருல், நாம் சுபிட்சமாய் இருக்கவேண்டுமென் ருல், ஒருவரோடொருவர் ஒத்துழைத்து, நம்பிக்கையை வளர்ப்பதுடன், வெளிநாடுகளில் நமக்குள்ள மதிப்பையும் பெருக்கிக்கொள்ளவேண்டும். உங்கள் வீட்டில் பேய் உலாவுகிறது என்று நீங்கள் நம்பி, அதை வெளியிலே சொல்லிப் பரப்பிவந்தால், உங்கள் வீட்டுக்கு வாடகை கிடைக்காது. நல்ல விலையும் கிடைக்காது. வீட்டிலே

ஜன்னல் கதவுகளை நன்றாகத் திறந்துவைத்து அங்கேயே வாழ்ந்து அதை அழகு படுத்தவேண்டும். அப்போது விசித்திரமான சப்தங்கள் கேட்பது நின்றுபோகும்.

49

முக்கியத்துவமும் பௌருஷமும் பொருந்திய ஒரு ஸ்தானத்தை அடைந்துவிடுவது எளிதுதான். ஆனால் அந்த ஸ்தானத்தை இழந்துவிடாமல் காப்பாற்றுவதுதான் மிகக் கஷ்டமானதாகும்.

50

யுவர் தன்மை என்பது வயதைப் பொறுத்ததல்ல. சுறுசுறுப்பான உள்ளமும் கடின வேலை செய்யும் ஆர்வமும் கொண்டிருப்பதே யுவர் தன்மையாகும்.

51

தாய் தகப்பன் இல்லாவிட்டால் ஒரு குழந்தை சீரும் செல்வமாக வளரமுடியாது. அதேபோல், ஒரு சர்க்காரும் தாய்போன்ற உணர்ச்சிகொண்ட சமூக சேவையாளர்களும் இல்லாவிட்டால் ராஜ்யம் என்ற சிறு குழந்தை செவ்வனே பராமரிக்கப்பட முடியாது.

52

நன்னடத்தைக்கும் ஜனநாயகத்துக்குமிடையே எவ்வித முரண்பாடும் கிடையாது. அன்பும் ஆதரவும் மிகுந்த நடத்தை, அநேக பரம்பரையாக பிதுரார்ஜிதமாகக் கிடைத்துள்ள உயர்ந்த சிந்தனைகள் ஆகியவைகளுக்கும், சரிசமத்துவ லட்சியம்கொண்ட ஜனநாயகத்துக்குமிடையே எவ்வித முரண்பாடும் கிடையாது. நவீன அரசியல் அபிலாஷைகள் போக்குகள் முதலியவைகளுடன் பொருந்தி இணையுமாறு நம்முடைய புராதன கலாசாரத்தையும் தொகுத்து அமைக்க நாம் கற்றுக்கொள்ள வேண்டும்.

53

நாமெல்லோரும் பிறவி மூலமாக சில குணாதிசயங்களைப் பெறுகிறோம். நம்முடைய சொந்த முயற்சியின் விளைவாகவே அவைகள் ஏற்பட்டுள்ளவை என்று பொதுவாக கருதப்படுகிறது. ஆனால் பரிசீலனை செய்து பார்த்தால், ஜனங்களிடம் காணப்படும் பல்வேறு குணாதிசயங்கள் பாரம்பர்யத்தின் விளைவாக ஏற்பட்டுள்ளவை என்பது தெரிய வரும்.

54

உலக வாழ்க்கையில் நாம் செய்யவேண்டிய கடமைகளைச் சரியாகச்செய்து தீர்ப்பதற்கு உள்ளத்தில் உண்டாகும் விருப்பமும் உற்சாகமும் காமம் அல்ல. அந்த விதமான ஆசை தருமத்துக்குப் பகை அல்ல. அது தருமத்துக்கு இசைந்த விருப்பம்.

55

பாலில் உள்ள சத்து நெய். அதுபோல் சந்நியாசத்தினுள் நெய் பாகம் அதிலடங்கிய பற்றறுத்தல். செயலின்மை யல்ல.

56

மனிதன் செயலெல்லாம் பிறப்புடன் வந்த சுபாவங்களின் பயன். அந்தச் சுபாவ குணங்கள் தம் பாட்டுக்கு வேலை செய்யும். சுபாவ குணங்களை அறவே புறக்கணித்து விடும் முயற்சி வீணாகும். அவற்றை நல்வழியில் செலுத்துவதே மனிதன் செய்யக்கூடிய முயற்சி.

57

ஆசை என்பது பல வேஷங்கொண்டு உள்ளத்தைக் கவர்ந்து கொள்ளும். ஒரு கோட்டையைக் காப்பதுபோல்

உள்ளத்தைக் காக்கவேண்டும். விரோதி, அதாவது ஆசை உள்ளே பிரவேசித்து அந்தக் கோட்டையைப் பிடித்துக் கொண்டு விட்டால் பிறகு எல்லாம் கெட்டுப்போகும். ராஜ தானியை எதிரி பிடித்துக்கொண்டால் தேசம் முழுவதும் அவன் வசமாகி விடுமல்லவா?

58

இல்லற வாழ்வு என்பது ஆற்று வெள்ளத்தை வயலில் பாய்ச்சி, பயிரெடுத்துச் சுகம் பெறுவது போலாகும்.

59

கூடா ஒழுக்கம் இன்பத்துக்கு வழிபோல் தோற்றம் காட்டி மோசம் செய்து, வாழ்க்கையை நாசம் செய்யும் என்பதைத் தமிழ் நூல்களில் பெரியோர்கள் வெகு தெளி வாய்க் காட்டியிருக்கிறார்கள். ஆயினும் நூல்களைப்படித்து மனிதன் அறிவு பெறுவது கடினம். இயற்கை வேகம் அறிவைத் தோற்கடித்து விடுகிறது.

60

வாழ்க்கையில் மகிழ்ச்சி தரும் விஷயங்கள் எத்தனை யோ இருக்கின்றன. அவற்றில் மனத்தைச் செலுத்திக் காலங்கழிக்கப் பயிலவேண்டும். புண்ணியமும் பயனும் மகிழ்ச்சியும் கலந்த துறைகளில் தினசரி வாழ்க்கையில் உள் ளத்தைச் செலுத்திச் சந்தோஷம் அடைந்து வந்தால் கிரா மியக் கலவி போகத்தில் புத்தி அதிகமாகச் செல்லாது. எல் லாம் பழக்கத்தைப் பொருத்து நிற்கிறது.

61

ஆணும் பெண்ணும் ஒருவரை யொருவர் நெருங்கிய உடனே நம்மவர்களுடைய எண்ணம் தேக தருமத்தில் சென்றுவிடுகிறது. அத்தகைய அடங்கா வேகம் மேல் நாட் டாரில் அநேகமாக இல்லை. ரொம்பக் குறைவு. இதற்குக்

காரணம் சீதோஷ்ணநிலை என்பார்கள். இந்தச் சமாதானத்தை நான் ஒப்புக் கொள்ளவில்லை. நம்முடைய பயிற்சியும் பண்பாடும் வித்தியாசப்படுகிறது. இதுதான் முக்கியமான காரணம்.

62

படிப்பு, பாட்டு, சித்திரம், ஆட்டம், கேளிக்கை, கூத்து, பேச்சு, ஹாஸ்யம், அழகான ஆறு, மலை, தோப்பு, வானம் முதலிய இயற்கைச் சௌந்தரியங்களும், இன்னும் எவ்வளவோ அனுபவிக்கக்கூடியவைகளும் உலகத்தில் இருக்க, அவற்றைப் பயன் படுத்திக் கொள்ளாமல் பயனற்ற ஒரு பைத்தியக்கார விஷயத்தையே பேரின்பமாக வைத்துக் கொண்டு அலைந்து உடலையும் உள்ளத்தையும் கெடுத்துக் கொள்கிறோம்.

63

பணம் என்பது ஒரு சாதனப்பொருள். அதுவே ஒரு சுகமன்று, முடிவுமன்று. அவரவர்களுக்கு ஒரு வரம்புண்டு. அந்த வரம்புக்குமேல் மிஞ்சின பின் அது ஒரு பாரமும் கவலையுமேதான்.

64

நாம் கோருவது சுகம். இதை மறந்துவிட்டுக் காகிதத்தில் எழுதிய பணத்தின் கணக்கே சுகம் என்று கற்பனை செய்துகொண்டு அதற்கு அடிமையாய்ப் போகிறோம். முன் காலத்திலாவது பணம் என்பது தங்கம் வெள்ளியாக இருந்தது. கை நிறைய எடுத்து அள்ளும் பான்மை கொண்டதாக இருந்தது. அள்ளியும் எண்ணியும் மடையர்கள் இன்பம் அடையலாமாக இருந்தது. இக் காலத்தில் அதுவும் இல்லை.

65

நம்முடைய தேகமும் உள்ளமும் ஆண்டவனுடைய கோயில். அதைச் சுத்தமாக வைத்துக் காப்பது நம் கடமை.

66

நம்பிக்கையின்றிச் சந்தேகப் பட்டுக் கொண்டேயிருந்தால் மாலுமி யில்லாத படகைப் போல், கடலில் அலைந்து காற்றில் அடிபட்டுக் கெடுவோம்.

67

சச்சரவின்றி வாழ்வதற்கு ஜனங்கள் தெரிந்து கொண்டால் பிறகு வக்கீல்கள் தேவைப்பட மாட்டார்கள். ஆரோக்கியமாக வாழ ஜனங்கள் தெரிந்துகொண்டால் டாக்டர்களின் தொகை குறைந்துவிடும்.

68

மணம் செய்துகொண்டு இல்லற வாழ்க்கையை நன்கு நடத்தக் கற்கவேண்டும். அதுவே உண்மையான குடும்பக் கலை.

69

படிப்பையும் பரீட்சையும்விட மிக அதிகமாகப் பொறுமையைச் சோதிக்கக்கூடியது இல்லற வாழ்க்கை. இல்லற வாழ்க்கையில் சோதனைமேல் சோதனையாக வரும். கோபத்தை அடக்கவும், அன்பு கனிந்த உண்மையைப் பேசவும் தெரிந்து கொண்டால் எத்தகைய நிலைமையையும் சமாளிக்கமுடியும்.

70

அன்புக்கலை, சுமுகமாக நடந்துகொள்ளும் கலை, பொறுமைக்கலை, மதுரமொழி பேசும் கலை, கோபப்படா

திருக்கச் செய்யும் கலை ஆகியவற்றைப் பெண்களுக்குப் போதிக்கவேண்டும். பெண்களில் பெரும்பாலோருக்கு, இக்கலைகள் தேவைப்படுகின்றன.

71

ஒரு விஷயத்தை கௌரவித்தாலொழிய அந்த விஷயத்தின் உண்மை புலப்படாது.

72

சங்கீதத்திற்கு மொழியே வேண்டாம் என்று சிலர் சொல்லுகிறார்கள். இது எப்படி இருக்கிறது என்றால் தென் கலைவேண்டுமா, வடகலைவேண்டுமா என்று கேட்டால், ஹிந்துமதமே வேண்டாம், சிவன் கோவில் வேண்டுமா, விஷ்ணு கோவில் வேண்டுமா என்று கேட்டால் கோவிலே வேண்டாம், என்று இப்படிச் சொல்லிக் குறுக்கடியாக வாதம் செய்து முடித்துவிடலாம் என்பதற்காக முடித்துவிடுகிறார்கள்.

73

செய்யப்போகும் ஒரு காரியம் நியாயமா, சமயத்திற்கு ஏற்றதா என்பதை ஆராய்ந்து தன்னைத்தான் அடக்கி ஆளும் சக்தியே விவேகம்.

74

கெட்ட காரியத்தில் இறங்கவேண்டியவன் மனச்சாட்சியின் தொந்தரவுகளை ஓட்டிவிடுவதே தைரியம் என்று அவன் கருதுகிறான். குடிப்பவனுக்கு ஒரு நிகழ்ச்சி பெரியதா சிறியதா என்பது தெரியாது.

75

ஒரு மனிதனுடைய நடவடிக்கை, அவனுடைய குடும்பத்தை பாதிக்கிறது. ஒருவன் சம்பாதிக்கும் பொருளில்,

மக்கள் மனைவிக்குப் பங்கு உண்டு. அவன் இஷ்டப்படி கள்ளு சாராயம் வாங்கிக் குடித்தால் மக்கள், மனைவியின் உரிமைகள் பாதிக்கப் படும். சுதந்திரம் என்பது மனம் போனபடி நடக்கிற அனுசார சட்டம் அல்ல. சமுதாய ஒழுங்குக்கு உட்பட்டுத்தான் நடக்கவேண்டும். ஒரு வியா பாரம் நாட்டுக்கு கேடு விளைவிப்பதானால் அதைத் தடுக்கும் உரிமை சமுதாயத்திற்கு உண்டு. சமுதாயத்தின் உரிமைகளை அரசாங்கம்தான் நிறைவேற்ற வேண்டும்.

76

கெட்ட வழக்கங்கள் காலதாமதம் செய்யச் செய்யப் பலப்பட்டு பிறகு திருத்த முடியாமல் போவது இயல் பாகும். காலதாமதம் செய்வது மதுபான விஷயத்தில் கஷ்டத்தை விளைவிக்கும்.

77

அதருமமான ஒரு ஆசை மனத்தில் உற்பத்தி ஆகும் போது, தாமதமின்றி அதை அப்போதே அகற்ற வேண்டும். "போ!" என்றால் போகாது. நம் உள்ளத்தை வேறு விஷயத்தில் செலுத்த வேண்டும். அப்படிச் செய் தால்தான் அதற்கு இடமில்லாமல் விலகும். வேறு நல்ல எண்ணங்களை எண்ணினால் கெட்ட எண்ணம் உள்ளே புகுவதற்கு வழி அடைபட்டுப் போகும். உள்ளத்தி னுடைய அமைப்பின் பெரிய ரகசியம் இது.

78

மனிதன் உள்ளம் உலகமெல்லாம் பாயும். ஆனால் ஒரே சமயத்தில் அதனில் இரண்டுக்கு இடமில்லை. எந்த விஷயமும் மனம் முழுவதையும் நிறைத்துவிடுகிறது. நல்லது ஒன்றை வைத்துக்கொண்டு மனத்தைப் பூரண மாக அதில் செலுத்தினால் மற்றொன்று தானாகவே அகற்றப்படும்.

79

இந்த மனோதரும ரகசியத்தைப் பயன்படுத்திக் கொண்டு தீய எண்ணங்கள், ஆசைகள் இவற்றை அகற்றவேண்டும். கொஞ்சம் இடம் கொடுத்தோமோ கெட்டோம்.

80

உலகத்தில் அநேகவிதமான மரங்களும் இருக்கின்றன; மிருகங்களும் இருக்கின்றன. அவைகள் எல்லாம் வேறு வேறானவை. அதேபோல் உலகத்திலுள்ள பலதேச மக்களுடைய வழக்கங்களும் சமூகப் பழக்கங்களும் வேறு வேறானவை.

81

வேறுபாடுகள் எல்லாம் வேறுபாடுகளேயன்றி, உயர்வு தாழ்வு குறிப்பன அல்ல என்பதை நாம் எப்பொழுதும் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். உயர்வு தாழ்வு கற்பியாமலிருந்தால் எத்தனை வேறுபாடுகள் இருந்தாலும் நாம் கவலைப்பட வேண்டியதில்லை.

82

ஆண்களும் பெண்களும் தங்கள் விருப்பம் போல் மணம் செய்து கொள்ளச் சுதந்திரம் உடையவர்களாக இருக்கவேண்டும் என்பதே என் உறுதியான நம்பிக்கை.

83

சீர்திருத்தம் செய்வதானால் மனித அறிவுக்கு ஒத்ததாக இரண்டு வழிகள் உள. ஒன்று கெட்டவர்களைத் தனியாகப் பிரித்துவைப்பது; அதுதான் சிறை செய்யும் முறை.

மற்றது கெட்டவர்களுடன் சேர்ந்து திருத்துவது. அது தான் கல்வி முறையில் அஸ்திவாரம். தனியாகப் பிரித்து வைக்கும் முறை தான் ஜாதி என்பது. அது இனிமேல் பயன்படாது.

84

மணம் என்பதெல்லாம் ஒரு விதமான நட்பு முறையே யன்றி வேறன்று. இரண்டு நண்பர்கள் கூட்டு முறையில் வாழ்க்கை நடத்த விரும்புகிறார்கள் என்பதே அதன் பொருள். ஜாதி வேறுபாடுகள் பார்க்காமல் இருந்தால் நண்பர்களாகவும் இருக்கமுடியும். கூட்டு முறையில் வாழ்க்கை நடத்தவும் முடியும்.

85

நாம் பலவீனமாக இருக்கும்போதுதான் பலாத்காரத் தைப் பற்றிச் சிந்திக்கிறோம்.

86

மணம் என்பது ஒரு முக்கியமான விஷயம். வாழ்க்கை முழுவதையும் பாதிக்கும் விஷயம். இருவருடைய வாழ்க்கை யும் இன்பகரமாக இருக்கவேண்டும் என்ற ஒரே நோக்கத் துடனேயே அதில் இறங்கவேண்டும்.

87

அன்பு முறை விரைவாகப் பயன்தராது; பகைமை முறைதான் விரைவாகப் பயன் தரும் என்று எண்ண வேண்டாம். அன்பு முறையும், அறிவு புகட்டும் முறையும் தான் பலன் தரும் வழி. வேறு வழி கிடையாது. பகைமை வழியும் பலவந்த வழியும் தோல்வியுறுமேயன்றி வெற்றி பெறாது. நன்கு ஆராய்ந்து பார்த்தால் அன்பு முறைதான் அதிவிரைவில் பயன் தருவதாகும்.

88

அறிய முடியாத அளவு பெரியதாகும் அறிவு என்னும் மகா சமுத்திரம், ஏதோ அங்கும் இங்கும் அலைகள் கொண்டுவந்து ஒதுக்கும் சிப்பிகளில் சிலவற்றைச் சேகரித்ததும் சமுத்திரத்தைப்பற்றி முழுவதும் அறிந்துவிட்டதாக எண்ணி விடுகிறோம். பணிவுடையோர்தான் எதையும் அறிய முடியும்.

89

பத்து வயதுச் சிறுமியை மணப்பதோ, பதினாறு வயது விதவையை மொட்டையடிப்பதோ ஹிந்து சமயம் என்று கருதாதீர்கள். பூநூலைத் தோளில் போட்டுக் கொள்வதும், பலவிதமாக நெற்றிக்கு இட்டுக்கொள்வதும் ஹிந்து சமயம் ஆகாது. இவை எல்லாம் ஹிந்து சமயமாகிய சமுத்திரத்தின் மீது அவ்வப்போது தோன்றும் அலைகளாகும். அலைகள் தான் சமுத்திரம் என்று எண்ணி விடாதீர்கள். அலைகள் மறைந்து விடலாம். ஆனால் சமுத்திரமோ எப்பொழுதும் உள்ளதாகும். இப்பொழுது உள்ள வழக்கங்களை எல்லாம் விட்டு விட்டாலும் நாம் ஹிந்துக்கள் தான்; முஸ்லீம்களாகவோ, கிறிஸ்துவர்களாகவோ, நாஸ்திகர்களாகவோ ஆகிவிடமாட்டோம்.

90

பகல் முழுவதும் மனத்தில் துக்கம் நிறைந்திருந்த போதிலும் இரவில் தூக்கம் வந்ததும் அதை மறந்து இன்பமாகத் தூங்குகிறோம். அதனால் உறக்கத்தை ஒரு வரப்பிரசாதமாக எண்ணுகிறோம்.

91

நாம் ஒரு காரியத்தை ஒரு தடவை செய்ய ஆரம்பித்து விட்டால், பிறகு அதைத் திரும்பச் செய்ய ஆசை

உண்டாகிவிடுகிறது. அதை மறுபடியும் செய்வதற்குத் தகுந்தவர்களாக நம்மை ஆக்கிக் கொள்கிறோம். அதே போல தீய எண்ணத்தை ஒரு தடவை நம்முடைய மனத்தினுள் நுழைய விட்டுவிட்டால்பிறகு அது மறுபடியும் எளிதில் நுழைவதற்கு உரிமை பெற்றதாக ஆகிவிடுகின்றது.

92

மெழுகினால் செய்த பொம்மையை மெதுவாகத் தொட்டாலும் உருவம் மாறிவிடும். அதைவிட மெல்லியது நம்முடைய மனம். அதனால் மிகச் சிறிய தீய எண்ணங்கள் கூடப் போதும் அதைப் பழுதாக்கிவிடுவதற்கு.

93

தற்காலிக சுகபோகங்களுக்காக நாம் நம்முடைய ஒழுக்கத்தைப் பழுதாக்கிக் கொள்ளலாகாது. வாழ்வில் இன்பம் பெறுவதற்குரிய வழி நம்முடைய ஒழுக்கத்தைப் பாதுகாப்பதையே பொறுத்ததாகும். ஒழுக்கம் தவறினால் அதை எளிதில் பழுது பார்க்க முடியாது.

94

நற்செயலோ, தீச்செயலோ, நல்ல எண்ணமோ, தீய எண்ணமோ அது ஒருவித ஆசையை, ஒருவித தேட்டத்தை உண்டாக்கிவிடுகின்றது.

95

நம்முடைய எண்ணமும், செயலும் நம்முடைய ஒழுக்கத்தைத் தாக்குவது உண்மைதான். ஆனால் அதே சமயத்தில் நாம் அதைப் பழுது பார்த்துச் சரிப்படுத்த முடியும் என்பது உண்மையாகும். பித்தளையாலோ, இரும்பாலோ, ஓர் உருவம் செய்கிறோம். அதைத் தவறாக

அடித்து விட்டால் பழுதாய் விடும். ஆயினும் மறுபடியும் அடித்து அந்தப் பழுதை நீக்கி நல்லதாகச் செய்து விடுகிறோம். அதேபோல நம்முடைய ஒழுக்கத்தையும் நல்லதாகச் செய்துவிடலாம்.

96

மனதில் எழும் தீய எண்ணங்களை எல்லாம் அகற்றி விடவேண்டும். ஒரு தீய எண்ணத்துக்கு இடம் தந்தால், உடனே கோட்டைத் துவாரத்து வழியாகப் பகைவருடைய படைகள் நுழைவது போல, ஆயிரக்கணக்காக வந்து நுழைந்துவிடும்.

97

எது முக்கியம், எது அதிக முக்கியம் இல்லை என்று நாம் சண்டை இட்டுக்கொள்ளலாகாது. மழை பெய்தால் அநேகவிதமான செடிகள் முளைக்கின்றன. அதுபோல் ஜன சமூகத்தில் புதிய உயிர் தோன்றும்பொழுது அநேகவித மான காரியங்கள் நடைபெற ஆரம்பிக்கின்றன. எதை முதலில் செய்யவேண்டும், எதைப் பின்னர் செய்ய வேண்டும் என்பதுபற்றி நாம் ஒருவருக்கொருவர் வாதாடிக் கொண்டிருக்கலாகாது. அவரவர் மனத்திற்குப் பிடித்த நல்ல காரியத்தைச் செய்யலாம்.

98

மழை பெய்வதுபோலவும், வெய்யில் காய்வது போலவும், சகலவிதமான காரியங்களும் நடைபெற வேண்டியனவே. ஒவ்வொருவரும் அவரவர் சக்திக்கு உகந்தவண்ணம் சேவை செய்ய விட்டுவிடவேண்டும்.

99

தாம் செய்யும் காரியம்தான் முக்கியமானது என்று ஒவ்வொருவரும் கர்வம்கொள்வது சகஜம். அப்படி நாம்

கர்வம் கொள்வோமானால், பிறர் கர்வத்துக்கு ஏன் பங்கம் விளைவிக்கவேண்டும்?

100

பிறர் பொறுமை யில்லாமலிருந்தால் என்ன? நாம் பொறுமையோடு இருப்போம். பிறர் பொறுமை இழந்தால் அதற்காகக் கவலைப்படவேண்டாம். சர்வலோக சஞ்சீவி யான அன்பைப் பயன்படுத்துங்கள். அது அற்புதமாகக் குணப்படுத்திவிடும்.

101

ஜனங்கள் மதங்களின் பெயரால் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதை நாம் நிறுத்தவேண்டும். அதற் காக நாம் மதத்தையே அழித்துவிடவேண்டிய அவசியம் இல்லை. சிலர் சமூக சீர்திருத்த விஷயத்தில் நமக்கு மாறான கருத்துடையவர்களாக இருந்தால், அதற்காகச் சமூக சீர் திருத்த வேலையைவிடச் சொல்லுகிறீர்களா?

102

அறிவைக் குழம்பவிடலாகாது. அன்பு உணர்ச்சியைக் கைவிடலாகாது. அத்துடன் பணிவுக் குணத்தையும் அடிக்கடி புதுப்பித்துக் கொள்ளவேண்டும். இல்லையெனில் நாம் கவலைப்படவும் செய்வோம். எந்தக் காரியத்தையும் செய்யமுடியாதவர்களாக ஆகிவிடவும் செய்வோம்.

103

சரியான வழியில் சென்றால் ஜெயம் காண்பது நிச்சயம். ஜெயம் காணவிட்டால் வேலையை எல்லாம் நிறுத்திவிட வேண்டியதே என்று எண்ணிவிடவேண்டாம். இளைஞர்கள் அதைரியப்படலாகாது.

104

பிறரிடம் குற்றம் கண்டுபிடிப்பதிலேயே திருப்தி அடையலாகாது. குற்றம் கண்டுபிடிப்பது சேவையாகாது. நாம் தீவிரவாதிகள்; நம் குறைகளை அறிய முயல்வதில்லை. மிதவாதிகளுடைய குறைகளைக் காண்பதிலும் அவர்களை வைவதிலுமே ஈடுபட்டிருக்கிறோம். மிதவாதிகளும் அதே காரியத்தைத்தான் செய்கிறார்கள். இந்தப்பொறியில் விழாதபடி நீங்கள் ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும்.

105

நாம் செய்யும் காரியங்கள் எல்லாம் எப்பொழுதும் அதிகமாக யாதொரு இடையூறுமின்றி நடைபெற வேண்டும் என்று எண்ணினால், நாம் உலகத்தில் எந்தக் காரியத்தையும் செய்து முடிக்கமாட்டோம்.

106

புதிய சோதனைகள் செய்யாவிட்டால் முன்னேற்றம் என்பது ஒரு நாளும் நடைபெறாது. சோதனைகள் செய்தால் எப்பொழுதும் சிறிது சேதம் உண்டாகவே செய்யும். அதனால் தைரியம், ஜாக்கிரதை இரண்டும் தேவையாகும்.

107

நம்முடைய தினசரி வாழ்க்கையில் நம்முடைய குடும்பத்தில் காணும் அன்பும் வாஞ்சையும் சக்தியின் உருவங்களே; இந்த அன்புதான் மக்களை மக்களோடு பிணைத்து வைக்கின்றது. அதுபோலவே வெறுப்பும் ஒருவித சக்தியே. குதிரை, வண்டியை இந்தப் பக்கமும் இழுக்கும், அந்தப்பக்கமும் இழுக்கும். அதுபோல அன்பு ஒரு பக்கம் இழுக்கிறது. வெறுப்பு ஒரு பக்கம் இழுக்கிறது. அன்பால் பிணைக்கப்பட்டவர்களிடையே கசப்பு ஏற்பட்டால்,

அன்பால் பிணைக்கப்படாதவர்களைவிட அதிகமாக ஒருவரையொருவர் வெறுக்கிறார்கள்.

108

உங்கள் அறிவு வானத்திலுள்ள நட்சத்திரங்கள் வரை எட்டக்கூடியதாயிருக்கவேண்டும். அப்போதுதான் நீங்கள் உண்மையை அறியமுடியும் நீங்கள் உங்கள் மனத்தைச் சுருக்கிக் கொள்வீர்களானால் நீங்கள் பொய்யிலேயே உழல்வீர்கள்.

109

நல்ல எண்ணங்கள், நல்ல மொழிகள், நல்ல செயல்கள் இவற்றிலுள்ள சக்தி அளவற்றதாகும், அதையே நாம் பயன்படுத்த வேண்டும்.

110

நாகரீகம், கலைகள், அரசாங்கம் முதலியவைகள் எவ்வாம் எந்த நாட்டிலும் ஒரே நாளில் நிலைத்துவிடமாட்டாது. மக்கள் பல்லாண்டுகளாக, உழைத்தே அவைகளை உண்டாக்கி, வளர்த்து, உயர்ந்த நிலையை உடையதாக ஆக்கியிருப்பார்கள்.

111

எவ்விதச் சட்டமும், திட்டமும் முதலில் நிறைவேற்றும்பொழுது தடைகள் உண்டாகும். உறுதியாக நிறைவேற்றிக்கொண்டே போனால் பொது அபிப்ராயம், கல்வி பழக்கம் எல்லாம் சேர்ந்து இந்தத் தடைகளை நீக்கும், முடிவில் தருமமான சட்டம் வெற்றியடையும் என்பதில் சந்தேகமில்லை.

112

ஏழைகளுக்கு உதவுவது நம்முடைய தேச ஆசாரத்தில் இன்றியமையாதது. எந்த நல்ல காரணத்தைக்

கொண்டும் இதை விட்டுவிட்டால், நம்முடைய பண்பாடு மயில் தன் தோகையை இழந்தவாறுகும்.

113

மரங்களுக்குச் சூரிய கிரணங்களைப் போல் சிறுவர்களுக்குச் சந்தோஷம் அவசியம். களிப்பின்றி குழந்தை வளர முடியாது. வெறும் எண்ணும் எழுத்தும் படிப்பும் போதிப்பது, சூரிய வெளிச்ச மில்லாத மரத்திற்கு எரு போடுவது போலாகும்.

114

இலைகளின்றி மரம் வளராது போன்றே குழந்தைகளின்றி மனிதன் வளர முடியாது. சிசுக்களிடம் அன்பு காட்டாத மனிதன் மனிதன் அல்ல.

115

ஞானமும் பக்தியும் அனைவருக்கும் உரித்தான பெருஞ் செல்வம்.

116

இல்லறத்தை நடத்தவேண்டியது கடமை. ஆனால் எந்த விஷயத்தையும் அளவு அறிந்து கிரகித்துக் கொண்டு நடப்பது விவேகம். நிலையற்றதை நிலையுள்ளதாக எண்ணுவதில் ஒரு லாபமுமில்லை. உண்மையைத் தெரிந்து கொண்டு நடந்தால் துக்கம் குறையும்.

117

விசித்திரம் என்றால் உண்மை விளங்காத ரகசியமும் அதனுடன் அழகும் அற்புதமும் கலந்த பான்மை.

118

சகவாசத்தின் பயன் அனைவரும் அறிவார். உபதேசத்தைக் காட்டிலும் அது மிகச் சக்தி வாய்ந்தது.

சகவாசத்தின் பயனுகச் சாந்தமும் நடுநிலேயும் தோன்றும்.

119

'வேதாந்தம் வேண்டாம், சும்மா வாழ்க்கையை நடத்தலாம்' என்று பலர் செய்து பார்த்தவர்கள் கஷ்டமும் துக்கமும் நேர்ந்த காலத்தில் தாங்கமாட்டாமல் அளவில்லாத துக்க மடைந்திருக்கிருர்கள். ஆனபடியால் மனத்தில் முடிவுசெய்து கொள்ளவேண்டும்: வாழ்க்கை என்பதில் துக்கம் கலந்தே இருக்கும்; இன்பத்தின் அங்கம் துக்கம்.

120

துறவு என்பது ஒரு வெளி வேஷமல்ல. அது உள்ளத்தில் நிறைவேற வேண்டிய ஒரு வெற்றியாகும்.

121

காவி உடை உடுத்திச் சில ஆண்டுகள் கழித்து உலக வியாபாரங்களில் மறுபடி கவனம் செலுத்திக் கோபமும் கவலேயும் கொள்ளும் பல சந்யாசிகளேப் பார்த்து வருகிரும். துறவு பூண்டும் செல்வாக்கு வேட்டையை முன் போலவே நடத்துவதும் அதற்காகத் துறவு நிலேயையும் ஒரு சாதனமாகவே உபயோகிப்பதையும் பார்த்து வருகிரும். இவையெல்லாம் மகாபாபம். துறவு மார்க்கத்துக்கே அபவாதம் கொண்டுவரும் துராசாரங்கள்.

122

துறவிகள் எவ்வாருயினும் துறவு என்பது நம் முன்னேர்கள் கண்ட பெருஞ் செல்வம். அதைப் பற்றிச் சந்தேகமில்லே. ஆனுல் பக்குவமடையாமல் அவ்வழியில் பலர் இறங்கியதன் காரணமாகத் துறவு மார்க்கத்துக்கே கவுரவக் குறைவு உண்டாய் விடுகிறது.

123

பள்ளிக்கூடத்தில் நூல்கள் நெட்டுருச் செய்து பாஸ் செய்யும் பரீட்சைகள் உண்டல்லவா? அந்தப் பரீட்சையில் ஞாபக சக்தியை வைத்துத் தேறி விடலாம். சங்கரரும் கீதையும் சொல்லும் அறிவுக்கு ஞாபக சக்தி ஒரு பிரயோஜனமுமில்லை. இலக்கணப் பிழையின்றித் தத்து வார்த்தம் பேசுவதில் பயனில்லை. வாழ்க்கை எப்படி நடத்துகிறாய்? துக்கத்தை எப்படித் தாங்குகிறாய்? இந்தப் பரீட்சையே மெய்யறிவுக்குப் பரீட்சை.

124

இன்பம் என்பது உள்ளத்தின் நிலை. புலன் அனுப வத்தில் உண்டாகும் மகிழ்ச்சி ஒருவகை இன்பம். ஆனால் இறைவனோடு கலந்து போய் உள்ளத்தில் உண்டாகும் ஆனந்தம் வேறு. அதுவே குறைவிலா இன்பம்.

125

பக்தர்கள் கடவுளை எந்த உருவம் எந்தப் பெயர் வைத்துத் தியானித்துப் பக்தி செய்தாலும் ஒன்றே. சம்பிரதாய வேறுபாட்டினால் கெடுதல் ஒன்றுமில்லை. வழக்கப்பட்டு வந்த முறையில் பக்தி செய்தால் பக்தர் களுடைய உள்ளம் கரையும். உள்ளம் கரைவதுதான் முக்கியம். அதுவே பயன்தரும். உள்ளம் கரையாமல் போனால் எவ்வளவு நேரம் எந்த முறையில் பூஜை செய்தாலும் பயனில்லை.

126

சிவன், திருமால் என்கிற வேறுபாடானது பெயர் மட்டிலுமே. அன்பும் உறுதியான பக்தியும் சிலரைத் திருமால் சிவனுக்கு அடிமை என்றும், சிலரைச் சிவன் திருமாலுக்கு அடிமை என்றும் பாடச் செய்யும். அது அன்பின் வேகமேயொழியச் சிவனையாவது திருமாலை

யாவது பாதிக்காது. பரம்பரையாக வந்த நாமங்கள் அனைத்தும் ஒரு ஈசனுக்கு வைத்த பல பேர்கள். இதனால் நாம் குழப்பமடைய வேண்டியதில்லை.

127

திருமால்தான் சர்வேசுவரன் என்று சிலரும், சிவனே சர்வேசுவரன் என்று வேறு பக்தர்கள் பாடுவதும் அவர்களுடைய பக்தி உரிமை. இது நம்மைக் குழப்பப்படுத்த வேண்டியதில்லை. நாமும் அவ்வாறே நமக்கு எது பிடிக்கிறதோ அதை வைத்துப் பக்தி செய்யலாம்.

128

மனிதன் உள்ளத்தில் ஒரு ஆசை உண்டாகிறது அதைத் தீர்த்துக்கொண்டால் பிறகு சுகமாக இருக்கலாம் என்று எண்ணுகிறான். அதற்காகப் படாத பாடுபடுகிறான். ஆனால் ஆசையின் படிகளுக்கோ முடிவேயில்லை; முடிவில்லை என்று அறிந்துகொள்வதற்கும் அது இடம் தராது. சுற்றும் சக்கரவட்டமான ஒரு ஏணியின் மேல் ஏறப் பார்க்கிறோம். ஏற ஏறச் சக்கரம் கீழே போகிறது. மேலே ஏறுவது போலத் தோன்றும். ஆனால் ஒருபடி ஏறியதும் ஏறியபடி கீழே போய்விடும். புதுப்படி வந்து நிற்கும். படிகளுக்கு முடிவேயில்லை; சிரமத்திற்கும் முடிவேயில்லை. சாகும்வரை ஏறுவதே வேலை. ஒன்றை அடைந்தால் பிறகு சும்மா இருக்கலாம் என்று தோன்றும். ஆனால் அவ்வாறு தீர்த்துக்கொள்ள முடியாது. புது ஆசை உண்டாகும். இதுவே ஆசையின் கதை.

129

ஆசை தீர்த்துக்கொள்ளப் பார்க்கும்போது தடை ஏற்படும். அதனால் கோபம் கிளம்புகிறது. மனிதனுக்குக் கோபம் என்பது ஒரு கெட்ட பகை. அதனால் துவேஷம் உண்டாகிறது. பிறருக்கும் துன்பம்; தனக்கும் துன்பம்.

துன்பப்படத் துன்பப்படக் கோபம் அதிகரிக்கும். உடலில் ஒரு நோய் வந்தால் அது தொந்தரவு செய்து விட்டுப் பிறகு ஓய்ந்துபோகிறது. இது நோயின் இயல்பு —கோபம் அவ்வாறல்ல. துன்பம் உண்டாக்கி, உண் டாக்கி வளர்ந்துகொண்டே போகும். ஓயாது.

130

ஆசைகள் பலவிதம். சில ஆசைகளைச் சொல்லிக் கொள்ள வெட்கப்படுவோம். ஆனால் அவற்றின் குணம் எல்லாம் ஒன்றே! எவ்வளவு விறகு போட்டாலும் அந்த நெருப்பு எரிந்துகொண்டே யிருக்கும், தீனிபோட்டு அணைக்க முடியாது. இன்னும் வேண்டும், இன்னும் வேண்டும், என்றே கேட்கும். தீனிபோடுவதனால் பசி அதிகரிக்கும். பசி தீராது.

131

இன்பம் நுகரும் புலன்களின் சக்திக்கு ஒரு வரம்பு உண்டு. ஆனால் சக்தி தீர்ந்துபோனாலும் ஆசை தீராது. இது ஒரு பெரும் வியப்பு. புலன்களின் சக்தி குன்றி முடிந்துபோனாலும் ஆசைக்கு இறுதியே இல்லை. அது வேதனை செய்து கொண்டேயிருக்கும். அதனால்தான் ஆசையை ராக்ஷசன் என்பர்.

132

பொருளாசைக்கு சமஸ்கிருதத்தில் லோபம் என்று பெயர். கலவியின்ப விருப்பத்தினால் உண்டாகும் மனக் கலக்கத்துக்குக் காமம் என்று பெயர். குரோதம் இவை யிரண்டினின்றும் வளரும். குரோதத்தினின்றும் எல்லா விதப் பாவங்களும் உண்டாகும். கோபம் என்பது மனிதனை எதையேனும் செய்யச் சொல்லும். அவனுடைய விவே கத்தை அழித்துவிட்டு மனிதனை மிருகமாக்கிவிடு கிறது.

133

தருமத்துக்கு முரண்படாத நல்ல விருப்பங்களெல்லாம் ஈசனுடைய அம்சமாகவே கருத வேண்டும்.

134

முன் காலத்தில் பிரார்த்தனையின் சக்தியில் ஒரு நிலையான நம்பிக்கைகொள்ளும் வழக்கம் இருந்தது. பிரார்த்தனையின் சக்தியில் நம்பிக்கையில்லாத ஒரு பகுதியினரின் நடவடிக்கைகள், பிரசாரம் காரணமாக அதை இப்போதெல்லாம் மறந்துவிட்டோம். இழந்த பழக்கத்தில் ஓரளவாவது மீண்டும் ஏற்படுத்தும் பொறுப்பு உங்களுடையது. ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்தவுடன் பிரார்த்தனை செய்வதை முதல் வேலையாக வைத்துக்கொள்ளவேண்டும். நம்முடைய ஹிருதயத்தை தூய்மைப்படுத்துமாறும், சரியான பாதையில் நம்மைச் செலுத்துமாறும், நம்முடைய முயற்சிகள் வெற்றிபெறுமாறு ஆசீர்வதிக்குமாறும் கடவுளைப் பிரார்த்திக்கவேண்டும். நீங்கள் இதைச் செய்தீர்களானால், உங்கள் முயற்சிகள் யாவும் இறுதியில் வெற்றி பெறும் என்பதில் சந்தேகமே இல்லை.

135

மதத்தில் வேற்றுமை கிடையாது; கருத்தில் தான் வேற்றுமை.

136

உண்மையான சங்கீதக் கலையின் நுட்பங்கள் மர்மமானவையாக இருந்தாலும் இதைப் பலர் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். சங்கீதத்தைப் பாகுபடுத்திப் பார்க்கும் போதுதான் அது மர்மமானது என்று தெரியவரும். ஆனால் சங்கீத அன்பர்கள் சங்கீதத்தை தத்தமக்குரிய வழிகளில் அனுபவிக்கிறார்கள்.

## 137

கல் ஒரு மலூரியில்மாணவன் அல்லது மாணவி கணிதம் மட்டும் பயின்ருலும், அவர் பட்டதாரிதான். கணிதம், சரித்திரம், தத்துவம் எதைப் படித்தாலும் அப்படித்தான். அது போலவே தான் நாம் எந்த மதத்தைப் பின்பற்றினு லும், எவ்வித வழிபாட்டை அனுசரித்தாலும் நாம் அனை வரும் இந்திய மக்களே.

## 138

ஆரம்பத்திலிருந்தே குழந்தைகள் தம் கைகளால் வேலை செய்யக் கற்றுக்கொடுக்க வேண்டும்; அவர்கள் தங்கள் எதிர்காலத்தை உருவாக்கிக் கொள்ளப் பயிற்சி தரவேண்டும். சரியான கல்வி அளிக்கவேண்டும். குழந்தை களுக்காகச் செல்வத்தைச் சேர்த்துவைக்க வேண்டிய தில்லை. அது அவர்களைச் சோம்பேறிகளாக்கி விட லாம்.

## 139

நாம் ஒரு குறிப்பிட்ட வழிபாட்டைப் பின்பற்றும் குடும்பத்தில் பிறந்ததால் அந்த மதத்தைச் சேர்ந்தவர்களா கிருேம். இது தற்செயலானது. எனவே வேற்றுமை ஏதோ இருப்பதாக ஏன் கற்பனை செய்துகொள்ள வேண்டும்?

## 140

மனித வர்க்கத்தில் உலகத்தின் ஆயுள் காலம் பரியந் தம் மோதிக்கொண்டு கிடக்கும் பிரச்னைகளை தீர்த்துக் கட்டிவிட முடியாது. ஒரு குறிப்பிட்ட பிரச்னை சம்பந்த மாகக்குறிப்பிட்ட சந்தர்ப்பங்களுக்கும்,சூழ்நிலைக்கும் ஏற்ற முறையில் நாம் புரிந்து கொள்ளக்கூடிய முறையில் அவ்வப் போது நமது கடமையை நிறைவேற்றுவது தான் சாத்தியம்.

141

அவ்வப்போது செய்திருக்கும் தவறுகளைத் தொடர்ந்து செய்ய முயற்சிக்கக் கூடாதென்பதை நீங்கள் உணர வேண்டும்.

142

கடவுளிடம் நிலையான நம்பிக்கை கொள்ள வேண்டும். நம்பிக்கை யற்றவர்களைப் பற்றி நாம் அதிகமாகக் கவலைப் படவேண்டாம். நாம் இவர்களைப்பற்றி அதிகமாகச் சிரத்தை காட்டி கவலைப் பட்டோமானால் கொஞ்சம் கொஞ்சமாக நாமே கடவுளிடம் நம்பிக்கை இழக்க ஆரம்பித்து விடுவோம்.

143

யுத்தத்தைப் பற்றியும் யுத்த தளவாடங்கள் பற்றியும் சாதகமாகவோ பாதகமாகவோ சொல்லலாம். யுத்தம் தப்புத்தான். எனினும் ஏன் யுத்தத்தில் இறங்கவேண்டி யிருக்கிற தென்பதை ஸ்தாபிக்க என்ன வெல்லாமோ சொல்லலாம். யுத்தமே கூடாது என்பதற்கும் எவ் வளவோ பேசலாம். வெறும் தத்துவவாதம் அல்லது சுலோகங்கள் மூலம் தீர்ந்து போகும்படி எந்த உலகப் பிரச்னையும் அவ்வளவு சுலபமான தல்ல.

144

யுத்தப் பிரச்னையைப் பற்றியோ, யுத்தத்தின் நியாய அநியாயம் பற்றியோ, எந்த விவேகியாலும் ஒரு சில வார்த்தைகளிலோ கோட்பாடுகளிலோ அல்லது சுலோகங் களிலோ வரையறுத்துக் கூறிவிட முடியாது.

145

ஒரு மனிதர் கோபமடையும்போது அவர் மனத்திற் குள்ளேயே புயல் எழும்புகிறது. மனச்சாட்சியை அது அழித்து விடுகிறது.

146

பெரியவர்கள் யாரையாவது புகழ்ந்து பாடினுல் அப்பொழுதும் அவர்கள் கடவுளேயே சிந்தித்துக் கொண்டிருக்கிருர்கள் என்பதை நான் ஞாபகமூட்ட விரும்புகிறேன்.

147

ஒரு குறிப்பிட்ட கடவுளேப் பூஜிக்கச் சென்ருல், அப்போது வேறு கடவுளேப் பற்றி நினேக்கக் கூடாது. சிவன் கோவிலுக்குச் சென்ருல் அங்கு விஷ்ணுவைப்பற்றி நினேக்கக் கூடாது. அதே மாதிரி விஷ்ணு கோவிலுக்குச் சென்ருல் அங்கு சிவனேப் பற்றி நினேக்கக் கூடாது. அப்படி நினேத்தால் நீங்கள் விரும்பும் பலன் கிட்டாது.

148

மனித சமுதாயம் கூட்டுறவு தத்துவத்தின் ஆதாரத்தைக் கொண்டு நிற்கிறது. கூட்டுறவின் நியமமே தருமம் என்பது. ஆசையும் பாவமும் மக்களேப் பிடித்துக் கொண்டால் அந்தக் கூட்டுறவு தருமம் கெட்டுப்போகிறது. மக்கள் ஒருவரை ஒருவர் நம்பமாட்டார்கள். ஒருவரையொருவர் கண்டு பயப்பட்டும் கவலேப்பட்டும் துவேஷித்தும் துக்கமடைவார்கள். கூட்டுறவு நடைபெருது. அனேவரும் துயரமடைவார்கள். மனித சமுதாயத்திற்குத் தருமமும் தெய்வ பக்தியும் இன்றியமையாத மூலதனம். இதை இழந்தபடியாலே பலவிதமான கஷ்டங்களே அனுபவிக்கிறேம். இதைச் சீர்படுத்துவதற்கு ஒவ்வொருவனும் செய்யவேண்டியது என்னவென்ருல், பிறரை எதிர்பார்க்காமல் தன் பாட்டுக்குத் தன் மனச்சாட்சி அதாவது உள்ளத்தில் காவலிருக்கும் தருமதேவதையின் எண்ணத்தின்படி நடந்து வரவேண்டும். அப்படிச்

செய்துவந்தால், பிறகு சிறு துளிகள் சேர்ந்து மழை யாகப் பெய்வதுபோல் தருமமும் பெருகிச் சமூகமும் நாடும் செழிக்கும்.

149

வீடே ஒருவனுக்குப் பள்ளிக்கூடமாகிறது. நம் நாட்டில் பிறந்தது முதல் வீடு பள்ளிக்கூடம். வீட்டில் பெரியவர்கள் பரம்பரையாகச் செய்துவரும் தொழிலைக் குழந்தைப் பிராயத்திலேயே கற்றுக்கொண்டு விடுவதால் வீடு பள்ளிக்கூடமாகிறது. அங்குதான் பயிற்சி பெறுவது. வேலை செய்வது. சிறப்புறுவது. எல்லாம் அங்கேயே தான்!

150

தீண்டாதவர்களை 'ஹரிஜனங்கள்' என்று பேர் வைத்தபோது, மகாத்மா காந்தியிடம், 'பெயரில் என்ன இருக்கிறது, பெயரை வைத்தால் அவர்களின் கஷ்டம் போய்விடுமா, நிலைதான் மாறி விடுமா' என்று நான் ஆட்சேபித்தேன். பெயர் நல்ல பெயராக இருக்கட்டுமே என்றார். நான் ஒப்புக்கொண்டேன்.

151

சமூகத்தில் ஒரு சிலர் உத்தியோகம், பதவி பெற்று விடுவதால், சமூகத்திற்கே பயன் என்று நினைப்பது தவறு. உத்தியோகம், பதவி பெற்றவர்களுக்கு அதனாலே லாபமே ஒழிய, இதரருக்கு அதிக லாபமில்லை.

152

குறைகளைச் சொல்லிக்கொண்டே போவதால் ஒரு பலனும் ஏற்படாது. ஆனால் எல்லா வகையிலும் சந்தோஷத்தையும், அன்பையும் பரப்புவதன் மூலம் அதிகப்பலனை எதிர்பார்க்க முடியும்.

153

கஷ்டங்களை நாம் அனுபவித்தால்தான், பின்னர் நாம், சுகத்தின் அருமை தெரிந்து நடந்து கொள்ள முடியும்.

154

ஒருவன் பசியுடன் இருந்தால்தான் சாப்பாடு பிடிக்கும். அதே போல்தான், கஷ்டப்பட்ட மனிதன் தான் சுகத்தை விரும்புவான்.

155

சொந்த விஷயத்தில் ஒருவர் நடு நிலைமையுடன் பேசுவது கஷ்டம். அப்படியே நடு நிலைமையுடன் பேசினாலும் அதைப் பிறர் நம்புமாறு செய்வது கஷ்டம்.

156

ஒரு விஷயம் பற்றி அனுதாபம் இருந்தால்தான் அதைப் புரிந்துகொள்ள முடியும்.

157

ஆராய்ச்சி என்பதற்கே அவசியமில்லாமல் போய் காரியங்களைச் செய்வது வழக்கமாகிவிட்டிருக்கிறது. எல்லாம் சரியாக நடந்தால் சந்தோஷம். தவறு ஏற்பட்டால் துக்கம் என்பது கூடாது.

158

பெரிய காரியங்களைச் செய்யும்போது அது பற்றி ஆராய்ச்சி செய்வது அவசியமாகும். கெடுதிக்கு மருந்து உண்டு. அதைக் கொடுத்து கெடுதியை அப்பால் ஒதுக்கினால் தானாக எல்லாம் சரியாக நடக்கும். அப்பொழுது தான் நாம் முன்னேற முடியும்.

159

இதரர் நடத்தை பற்றி நாம் ஆராயக்கூடாது. நம் நடத்தை பற்றி நாம் ஆராயவேண்டும் ஒவ்வொருவரும்

அவரவர் நடத்தைபற்றி ஆராயவேண்டும். இகர விஷயங்கள் என்ருல் சாட்சி முதலியவை தேவை. ஆனுல், நமக்குள் நாம் என்ருல் அது தேவை இல்லே.

160

அவரவர் குறைகளே அவரவர் உணர்ந்து தக்கபடி நடந்தால் குறைகள் தீர்ந்துபோய் பலன் ஏற்பட்டுவிடும். இதுபற்றி சந்தேகமே தேவை இல்லே.

161

தவறைச் சரிப்படுத்திக்கொள்ளப் பிரயாசைப் படுவதால் அவமானம் கிடையாது.

162

சாணே தீட்டிய கத்தி முனேபோல் நாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். பெரிய விஷயமாயிருப்பினும் சரி, சிறிய விஷயமாயிருப்பினும் சரி, நியாயம் அநியாயம் தெரிந்தது சரியாக நடக்க முற்படவேண்டும்.

163

பயப்படாமல் இருப்பது சுலபம். அது சந்தோஷத்தைக்கூட அளிக்கிறது. ஆனுல்! பட்சபாதத்தை ஒதுக்கித் தள்ளுவதுதான் கஷ்டம். நம்முடையவர் என்று நினேத்து மனதைக் குழப்பி, நம்மையே நாம் ஏமாற்றிக் கொள்ளக்கூடாது.

164

ஒருவரை ஒருவர் நம்பி ஒருவரையொருவர் அன்புடன் நேசிக்கும் குணத்தையும் வளர்த்துக்கொண்டால் முடிவைப்பற்றி ஒருவரும் கவலேப்படவேண்டுதில்லே. எல்லாப் பிரச்னேகளேயும் சுமுகமாகத் தீர்த்துவிடலாம்.

165

அன்பும், தயாளமும் மனிதர்களுக்கு ஏற்படுவது இயற்கையான விஷயமாகும். செயற்கையில் இது பிறக்க வில்லை. ஒருவன் கஷ்டப்பட்டால் கண்களில் நீர் வருகிறது. மனித யந்திர அமைப்பின் ரகசியங்களில் இது ஒன்று. கடின இதயம் இயற்கையாக ஏற்பட்டதல்ல. ஒருவன் இந்த நிலைமைக்கு மனத்தைப் பழக்கியதாலேயே அது ஏற்படும்.

166

மனிதன் உடம்பில் ஒரு யந்திரம் இருக்கிறது. அது வேலை செய்கிறது. ஓய்வு ஒழிச்சலின்றி இரவு பகலாக வேலை செய்து அது உடல் முழுதுக்கும் ரத்தத்தைச் செலுத்துகிறது. அந்த யந்திரத்துக்குப் பலம் வயிற்றி லிருந்து—நாம் சாப்பிடும் உணவிலிருந்து கிடைக்கிறது. உடம்பின் ஒரு உறுப்புக்கும், மற்றொரு உறுப்புக்கு மிடையே பரஸ்பரம் ஒத்துழைப்பு இருக்கிறது. மனிதன் உடம்பிலுள்ள யந்திரம் எப்படி வேலை செய்கிறது என்பது உடல் உறுப்புகளுக்குத் தெரியும். ஏதாவது ஒரு உறுப்பு தொந்தரவு கொடுத்தால் டாக்டரைக்கொண்டு சிகிச்சை செய்கிறோம். உறுப்புகள் சரியாக வேலை செய் வதற்கு எது இடைஞ்சலாக இருக்கிறதோ அதை டாக்டர் நீக்குகிறார். அவ்வளவுதான். டாக்டர்கள் எந்த வியாதியையும் குணப்படுத்துவதில்லை.

167

குறை இருந்தால்தான் நல்ல ஒழுக்கத்தின் மேன் மையை உணர்ந்து பாராட்ட முடிகிறது. நோயிருந்தால் தானே ஆரோக்கியத்தின் முக்கியத்துவத்தை உணர முடிகிறது.

168

கோபம் கூடாது, அது முகத்தின் அழகைக் கெடுத்து விடுகிறது. சாந்தமே முகத்திற்கு அழகு தருகிறது. ஆகவே, கோபத்திற்கு இடம் அளிக்காதீர்கள். இப்படி நீங்கள் நடந்தால் கட்டாயம் அழகாக, பிரகாசமாக இருப்பதுடன் வெற்றியும் காண்பீர்கள் என்பதில் சந்தேகமே இல்லை.

169

ஒன்றேயே பார்த்துக் கொண்டிருந்தால் பிடிப்பதில்லை. மாறுதலையே விரும்புகிறோம். குடும்பத்திலும் அப்படித் தான். குழந்தைகள் மாறி மாறிப் பிறந்தால்தான் சந்தோஷம் ஏற்படுகிறது. புதியதைப் புகுத்தினால் சந்தோஷம்.

170

ஒழுக்கத்துடனும் நாணயத்துடனும் ஒவ்வொருவரும் நடந்து கொண்டால், அதன் மூலம் எல்லோருக்கும் நன்மை விளையும்.

171

பரஸ்பர நம்பிக்கை, நன்னடத்தை நல்லொழுக்கம் ஆகியவையே வெற்றிக்கு மார்க்கங்கள்.

172

தோட்டி முதல் தொண்டைமான்வரை உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வித்தியாசமின்றி எல்லாப் பிரஜை களும் அரசாங்கத்தின் உறுப்பினர்கள்தான். எல்லோ ருடைய வேலைகளும் நல்லாட்சிக்கான முக்கியமான வேலை களே. அவற்றில் உயர்வு தாழ்வு கிடையாது.

173

தொழிலாளர் பிரச்னையைத் திருப்திகரமாகத் தீர்த்தா லொழிய உண்மையான சமாதானம் ஏற்படாது.

174

தர்மநெறி தவறக் கூடாதென்ற எண்ணமுள்ளவர் கள்கூடப் பல தவறுகள் செய்திருப்பதைக் காணமுடியும். அதெல்லாம் கதை என்று சிலர் கூறலாம். ஆராய்ச்சி யில் இப்போது இறங்கவேண்டியதில்லை. ஆனால் கவி தாம் கண்ணால் பார்ப்பதைத்தான் அழகான பாணியில் சித்தரித்துக் கூற முடியும் என்ற உண்மையை யாராலும் மறுக்க முடியாது. நான் இதை எல்லாம் சொல்வதன் நோக்கமென்ன என்றால் இப்போது போலவே அந்தக் காலத்திலும் பல இடையூறுகளும் சிரமங்களும் இருந் தன; ஆனால் அவைகளை மக்கள் மனச்சாட்சியினாலும் தர்மத்தினாலும் சமாளித்து வெற்றிபெற்றனர்.

175

'கொலை' யென்பது ஒரு பெரிய 'குற்றம்' என்று நான் மதிக்கிறேன். உயிர் புனிதமானது. ஒரு கொலை யானது அரசியல் நோக்குடன் நடந்தது என்பதற்காக அதைக் கொடுமையானதல்ல என்று சிலர் மதிக்கிறார்கள் போலும். நான் அவ்வாறு மதிக்கவில்லை. அது சிலருக்குப் புதுமையாகத் தோன்றலாம். ஒரு குறிப்பிட்ட அபிப்பிரா யம் வைத்துக்கொண்டிருந்தான் என்பதற்காக அவனைக் கொலை செய்வது நியாயமா? ஒரு சொந்தச் சண்டை நிமித்தமாக, ஒரு நிலம் நிமித்தமாக ஏற்படும் கொலையை விட அரசியல் காரணங்களுக்காகச் செய்யும் கொலையை பெருந்தீய குற்றமாக நான் மதிக்கிறேன். கொலையைக் கூட நியாயம் என்று மதிக்கும்படி அவ்வளவு முக்கிய மானதல்ல அரசியல்.

176

முன்காலத்தில் சட்டசபைகள் மூலம் சட்டம் இயற்றப்படவில்லை. ஆனால் சட்டங்கள் இருந்தன. அந்தச் சட்டங்களை கடவுள் இயற்றிய சட்டங்களாக மதித்து ஜனங்கள் அவைகளைப் பின் பற்றிவந்தனர். அப்போது சட்டசபை பிரேரணை செய்பவர், ஆதரிப்பவர் என்பது எல்லாம் கிடையாது. ஆனால் ஜனங்களின் வாழ்க்கை முறைகளையும் நடத்தையையும் ஒழுங்குபடுத்தச் சட்டங்கள் இருக்கத்தான் செய்தன. அதைத்தான் "தர்மம்" (கடமை அல்லது ஒழுங்கு முறை) என்று சொல்கிறோம். அது அச்சிடப்பட்ட புத்தகமல்ல. அது ஒவ்வொரு மனிதனிடமும் குடிகொண்டிருந்தது. அதுதான் மனசாட்சி. தர்மமும் மனசாட்சியும் மக்களின் வாழ்க்கையை நற்பாதையில் அழைத்துச் சென்றன. அவைதான் எல்லா உத்தியோகங்களிலும் தொழில்களிலும் வியாபித்திருந்தன. அதனால் அவர்களுக்கு வாழ்க்கையில் வெற்றி கிடைத்தது.

177

மக்களின் கண்ணியத்தைக் குறைக்காத வழியில் பிழைப்புக்கு ஏற்பாடு செய்யவேண்டும். அவர்களை பிச்சைக்காரர்களாக்குவதோ அவர்களது கஷ்டத்தைப் பிறர் பயன் படுத்துவதோ இல்லாமல் வேலையும் பிழைப்பும் கொடுக்கவேண்டும்.

178

பிரிட்டிஷ் சர்க்காரிடமிருந்து நாம் சுதந்திரமடைந்த உடனேயே தர்மம், மனச்சாட்சி என்ற நற்குணங்களிலிருந்தும் நாம் சுதந்திரம் பெற்றுவிட்டோம். தாங்கள் செய்வது தர்மமா? இல்லையா என்றுகூட நினைக்காமல் தங்கள் இஷ்டப்படி எதை வேண்டுமானாலும் செய்யலாமென்ற ஒரு புது தைரியம் இன்று எல்லோருக்கும் வந்துவிட்டது.

ஒரு தவறுக்கு நியாயம் காட்ட இன்னொரு தவறும் ஒரு நியாயமற்ற காரியத்திற்கு இன்னொரு நேர்மையற்ற காரியம் செய்ய ஜனங்கள் முயற்சிக்கிறார்கள். சுதந்திர உணர்ச்சி நல்லதுதான். என்றாலும் மேலே குறிப்பிட்ட விதமான சுதந்திரம் இருக்கக் கூடாது தாங்கள் ஏமாறக் கூடாது என்று வியாபாரிகள் நினைப்பதைப் போல ஜனங்களையும் வியாபாரிகள் ஏமாற்றக்கூடாது.

179

ஜனங்கள் கஷ்டப்பட்டால், அதற்குத் தக்கபடி சர்க்காரிலும் கஷ்டம்தான் இருக்கும். ஜனங்கள் நன்றாக வாழ முடியவில்லையென்றால் சர்க்காரின் நிதி நிலையும் நன்றாயிருக்க முடியாது.

180

நல்ல காரியங்களைச் செய்வதிலும் பெரிய விஷயங்களைச் சாதிப்பதிலும் மனதைச் செலுத்துங்கள். நமது நடத்தைகளை நமது சந்ததியார் பிரதிபலிப்பார்கள். இன்று நாம் செய்யும் காரியம் எதிர்காலத்தில் நமது குழந்தைகளைப் பாதிக்கக்கூடும். இதை மறந்துவிடக் கூடாது. அதை மனதில் வைத்து நாம் இப்போது உறுதியுடனும், தைரியத்துடனும், நடந்துகொள்ளவேண்டும். கெட்ட எண்ணங்களுக்கு அறவே இடமளிக்கக்கூடாது. நமது தரமும், ஒழுக்கமும், நடத்தையும் உயர்ந்ததாக இருப்பது அவசியம். குழந்தைகள் கெட்டுப்போக நாம் வழிகாட்டியாக இருக்கக்கூடாது. குழந்தைகளின் க்ஷேமத்தைக் கருதி அதற்குத் தக்கபடி நாம் ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும்.

181

பதவிகளை ஏற்கும்போது எல்லா மக்களையும் ஒன்று போல நடத்தவேண்டும். வித்தியாசம் பாராட்டக்கூடாது.

4

படித்தவர்கள் வழி தவறிவிடக்கூடாது என்பதே எனது கவலை. படிக்காதவர்கள்பற்றி எனக்குக் கவலை இல்லை. அவர்களுக்கு எப்போதும் ஆண்டவன் துணைபுரிவார்.

182

கோயில்களைப் பாதுகாப்பது அவசியம். ஆனால் அவை இப்போது உள்ள நிலையில் அல்ல. அவற்றைச் சுத்தமாகவும் அழகாகவும் செய்து, அவை பழைய பெருமையை மீண்டும் அடையும்படி செய்யவேண்டும். நம் பக்தி இரட்டிக்கவேண்டும். கோயில்களைப் பரிசுத்த மாக்கவேண்டும். உண்மை நிலை இன்ன தென்பதைப் படித்தவர்கள் உணரவேண்டும். சந்தேகங்களில் மூழ்கி விடக்கூடாது. பிரபஞ்சத்தின் ரகசியம் இன்னமும் விளங்க வில்லை. நாஸ்திகர்களின் பிரசாரத்தைக் கண்டு கவலைப்பட வேண்டியதில்லை. கடவுளின் நிலை பத்திரமாக இருக் கிறது.

183

தமிழ்நாட்டில் இரு கட்சிகள் இருக்கவேண்டும் என் பதே எனது விருப்பம். அதாவது நல்ல மனிதர்களைக் கொண்ட ஒரு கட்சியும், கெட்ட மனிதர்களைக் கொண்ட தனியாக ஒரு கட்சியும் இருக்கவேண்டும். ஆனால் நல்ல மனிதர்களும், பழங்காலத்து நண்பர்களும் இன்று எதிர்க் கட்சியில் இருந்து வருவதைக் காணத்தான் எனது மனம் மிகவும் வருந்துகிறது. எனது கட்சியில் இருப்பவர் அனைவரும் நல்ல மனிதர்களல்ல

184

நன்றாகப் படிக்காவிட்டால் பாதகமில்லை. உபாத்தி யாயர் சொல்வதைப் புரிந்து கொள்ளா விட்டாலும் தவறில்லை. மூளை வளர்ச்சியடையலாம். அல்லது தேக்க முற்றிருக்கலாம். ஆனால் உங்கள் ஒழுக்கம் உங்கள் கையில்தான் இருக்கிறது. சீலம் உடையவர்கள் எனப்

பெயர் வாங்குங்கள். வாழ்க்கை பூராவையும் நல்ல பெய ருடன் இன்பமயமாகக் கழிக்கலாம்.

185

கெட்டது எண்ணினுல் என்ன, கெடுதல் செய்யத் தான் கூடாது என்று நினைப்பது தவறு. அது சீரழிவில் தான் முடியும்.

186

வாழ்க்கைத் துணேவியைத் தேர்ந்தெடுப்பதில் இளே ஞர்கள் ரொம்ப அதிகமாக அவஸ்தைப்படக் கூடாது. ரொம்ப அதிகமாக இதற்கு மூளையைக் குழப்பிக்கொண் டால் வாழ்க்கையை அனுபவிக்க முடியாது. எல்லாப் பெண்களும் நல்ல பெண்கள்தான். யார் உங்கள் மனேவி யாக இருக்க விரும்புகிருளோ அவளே மிகவும் சிரமப்பட்டு தேடிப்பிடிக்கும் பெண்ணேவிட நல்ல மனேவியாக இருப்பாள்.

187

ஒழுக்கத்தைச் செல்வமாகக் கருதவேண்டும். நாட்டில் மீண்டும் பக்தி மலர்ந்து வருவதை நான் பார்க்கிறேன். பக்தி பலம் தரும்.

188

ஒழுக்கமாக நடந்து, கஷ்டப்பட்டு உழைத்தால் எவ்விதப் பற்ருக்குறையும் ஏற்படாது. தமிழ் மக்கள் நுண்ணறிவு படைத்தவர்கள். அவர்கள் பிரச்னேகளேத் தீர்பார்கள் என்பதில் எனக்கு நம்பிக்கையுண்டு. மாலேப் போடுவதுடன் வேலே முடிந்துவிட்டதாக நினேக்காமல் இளேஞர்கள் தேச நிர்மாணத்தில் தங்கள் பொறுப்பை உணர்ந்து கஷ்டப்பட்டுப் பாடுபடுமாறு கேட்டுக் கொள் கிறேன். பதவிக்கு ஏன் ஜனங்கள் போட்டியிடுகிருர்கள் என்பதுதான் எனக்குப் புரியவில்லே. பதவியிலிருப்பது சுலபமல்ல. துவேஷம் கூடாது. சிறந்த பண்பாடு

படைத்த தமிழர்கள் சமயத்திற்கேற்ப நடந்து கொள்வார்கள் என்பதில், எனக்கு நம்பிக்கை உண்டு. கடந்த கால வேற்றுமைகளை மறந்து, நாம் ஐக்கியப்பட்டால் பிறருக்கு வழிகாட்ட முடியும். அதுதான் என் விருப்பம்.

189

என்னுடைய நண்பர்களில் பலர் மறைந்து விட்டனர். அவர்கள் தங்களுடன் எதையும் கொண்டு போகவில்லை. போர்த்தியிருந்த சல்லாவையும் எடுத்துவிட்டுத் தீ வைக்கும் குரூரமான பழக்கம் நம்மிடம் இருக்கிறது. பிறகு தீ எல்லாவற்றையும் விழுங்கிவிடுகிறது. இந்த வழக்கத்தைப் பார்க்கையில் பணக்காரனின் ஞாபகம் எனக்கு வருகிறது. பொருட்களை விட்டுச் செல்வதைவிட நினைவை விட்டுச் செல்வது நல்லது. பணத்தின் அருமை தெரியாதவர்கள் அஜாக்கிரதை அல்லது கெட்ட நடத்தையால் அவற்றைத் துஷ்பிரயோகம் செய்யலாம். எனவே இருக்கும்போதே நல்ல ஸ்தாபனத்துக்குப் பணம் தருவது நல்லது.

190

ஒருவன் செடி வைக்கிறான். இன்னொருவனுடைய வெள்ளாடு அதை மேயக் காத்துக் கொண்டிருக்கிறது. அதேமாதிரி இளைஞர்களின் வளர்ச்சிக்கு கெடுதல் விளைவிக்க தயாராக தீய சக்திகள் சூழ்ந்துள்ளன. தவறான கருத்தை மனதில் வாங்கிக் கொண்டால் அது வெள்ளாடு போல, செடியாகிய புத்தியைச் சாப்பிட்டுவிடும். வளர்ச்சி குன்றிப்போகும். தவறான எண்ணங்கூடாது. அது கெட்டுப் போவதற்கான வழி. ஆகையால்தான் “மனதில் கெட்ட எண்ணத்தைப் புகவிடாதே; அது எல்லாவற்றையும் அழித்துவிடும்” என்று நமது மறைகள் முறையிடுகின்றன.

191

பக்தியில்லாமல் சங்கீதம் கிடையாது. ஹரிகதா காலக்ஷேபம் சங்கீதம் இல்லாமல் கதைகளும், கிடையா. ஹரிகதை இல்லாமல் அறிவும் இல்லை. புராணத்தின் மூலம் தான் உண்மை ஞானத்தைப் பெற முடியும். புத்தகங்களை வாசிப்பதனால் மட்டும் அறிவு வந்துவிடாது. 74 வருஷங் களுக்கப்புறம் இதைத் தெரிந்துகொண்டிருக்கிறேன். புத்தகங்களை மட்டும் படித்தால் அகந்தை வந்துவிடும். அறிவு வராது.

192

நன்கொடைகளைத் தருவது பெறுவது என்ற சம்பிர தாயங்கள் நீடிக்கவேண்டும். பிராம்மணர்கள் உரித்தான இந்த வேலையில் ஈடுபட்டு நன்கொடைகளைப் பிச்சை யெடுப்பது போற்றத் தக்கது. தன்னையும் தன் அந்தஸ் தையும் மறந்து பிச்சை யெடுப்பதற்கு இந்த வகுப்புப் போலப் பிறரால் முடியாது. பிராம்மணர்கள் பிச்சைக் காரர்களாகப் பிறக்கிறார்கள்; பிச்சைக்காரர்களாகவே இறப்பர். இடைக்காலத்தில், நல்ல சம்பாத்தியம் உள்ள வர்களிடம் மீத மிருப்பதைப் பிச்சை யெடுத்து இதைப் போன்ற நல்ல காரியங்களுக்குப் பயன் படுத்துவது நல்லது.

193

உலகில் பணம் சம்பாதிப்பவனுக்கே மதிப்புக் கொடுக் கிறார்கள். மோச வழி என்றாலும் பணம் சம்பாதிக்க வழி இருப்பதால் மதிக்கிறார்கள். பணம் இருந்தால் அவர்கள் மனிதனாக மதிக்கப்படுகிறார்கள். கள்ள மார்க்கெட்கார ராக இருந்தாலும் திருடனாக இருந்தாலும் பணம் இருந்தால் அதற்கென மதிப்பு அறியாமல் வந்து விடுகிறது.

194

அறிவைப் பெறுவதற்காகத்தான் நமது முன்னோர்கள் பிரபந்தகளை இயற்றியுள்ளார்கள். கதாகாலக்ஷேபங்களைக்

கேட்டு அதன் மூலம் பாமரர்களும் அறிவைப் பெற்று ஆனந்தமடைகிறார்கள். புராணங்களிலிருந்து நல்ல கதைகளைப் பொறுக்கி எடுத்துச் சரியாக வகுத்து மக்களுக்குப் பயன்படும்படி விவரிக்க வேண்டும். இது நல்ல தங்க ஆபரணத்தில், தேர்ந்தெடுக்கப்பட்ட மாணிக்கக் கற்களைப் பதிப்பது போலாகும். இக் கற்கள் பித்தளையில் பதிக்கப்பட்டால் அவற்றிற்கு மதிப்புக் கிடையாது. அது போலவே கதைகளும் புராணங்களிலிருந்து எடுக்கப்பட்டு பௌராணிகர்களால் திரித்துக் கூறப்பட்டால் ஹரிகதையிலுள்ள நம்பிக்கையை ஜனங்கள் இழந்து விடுவார்கள், ஹாஸ்யத்தையும் புகுத்த முயன்று கதாகாலக்ஷேபம் முழுதையும் சில சமயங்களில் சிலர் பாழ்படுத்தி விசுகிறார்கள்.

195

தெய்வீக வாழ்க்கை வாழ்ந்த மக்களின் பேச்சுக்கே ஒரு தனியான வேகம் உண்டு. அவர்களுடைய உபதேச மொழிகளுக்கு உள்ள சக்தி வெறும் படிப்பும் அறிவும் படைத்தவர்களின் தருமோபதேசத்துக்கு இருப்பதில்லை.

196

மகரிஷிகள் பேசும்போது அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் பேசுகிறது; அறிவு மட்டுமல்ல. மீமாம்ச வாதங்களும் விமரிசனங்களும் எவ்வளவு அழகாகவும் இருந்தாலும் ஆண்டவன் அருள் பெற்ற மகான்களின் சம்பாஷணைகளில் காணும் வேகத்துக்கு ஈடாகாது.

197

நம்முடைய சமூகம் சுதந்திர வாழ்க்கை அடைந்துவிட்டது. சுதந்திரத்துடன் சுகமும் பெற வேண்டுமானால் மக்கள் அறவழியில் நிற்க வேண்டும். நின்றால், சுகமும் நிகரற்ற புகழும் பெறுவோம்.‘கடவுளாவது! சாமியாவது!’

என்று பலர் இந்நாட்களில் தைரியமாகப் பேசுகிறார்கள். இது நம்முடைய துர்ப்பாக்கியம்.

198

கண்ணுக்கு காணப்படவில்லை என்பது கடவுள் இல்லை என்பதற்கு ஒரு காரணமாகுமா? இரவில் நட்சத்திரங்கள் திரள் திரளாகக் காணப்படுகின்றன. பகலில் எல்லாம் மறைந்துபோகின்றன. கண்களைக் கொண்டு காணாத பொருள்கள் இல்லவே இல்லை என்று சாதிக்க முடியுமா? நம்முடைய அறிவீன வாழ்க்கையில் கடவுளைக் காணவில்லை என்கிற காரணத்தினால் கடவுளே இல்லை, கடவுளுக்கு அவசியமும் இல்லை என்று சாதிக்க வேண்டாம்.

199

உள்ளத்தைப் பக்குவப்படுத்திக் கொள்ளாமல் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, பிறகு விட்ட பொருள்களின் நினைவிலேயே உள்ளம் தங்கி அலைந்துகொண்டு கஷ்டப்படுவதும், பிறருக்கு இது தெரியாமல் இருக்கும்படி லோக அபவாதத்துக்குப் பயந்துபோய் வேஷம் போடுவதும் துறவு நிலையாகாது. இதைக் காட்டிலும் யோக்கியமான இல்லற வாழ்வே மேலாகும்.

200

பாழிகளும் பாம்புகளுமிருக்கும் ஒரு பழைய வீட்டில் குடியிருந்தால் எவ்வளவு ஜாக்கிரதையாக இருப்போமோ, அப்படியே வாழ்க்கையில் காமமும் லோபமுமாகிய விஷப் பொருள்களைப் பற்றி ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

201

தூய மனத்துக்குச் சக்தி உண்டுதான். அது அபாயங்களைத் தாண்டித் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும். வலையில் சிக்காது. ஆயினும் யாரேனும் நீண்டகாலம் விஷப் பரீட்சை செய்தல் தவறாகும். நல்ல விவேகியின் உள்ள

மும் சில சமயம் தடுமாறிப் போகும். காமப் பொருள்களி னின்றும் ஜாக்கிரதையாகத் தூர நிற்பதே விவேகம்.

202

படிப்பும் புலமையும் வேறு; படித்த படிப்புடன் பக்தி யும் கலந்து மெய்யுணர்வாவது வேறு.

203

ஆண்டவன் சந்நிதானத்தில் படிப்பும் மேதையும் எம் மாத்திரம்? அங்கே ஊமையும் பேசும்; கபோதிகளுக்கும் கண் தெரியும்; சாஸ்திரங்கள் எல்லாம் படித்தவனும் படிப்பே இல்லாதவனும் ஆண்டவனுக்கு முன் ஒன்றே.

204

உயர்ந்த நூல்களைப் படித்தாலும் மனம் காமப் பொருள்களிலேயே உலவித் திரியும். படிப்பு வேறு. ஆசைப்படும் விஷயம் வேறு. ஆசைகளினாலும் பற்றுகளி னாலும் நாம் நூல்களிலிருந்து ஞானம் அடைவது தடைப் படுகிறது.

205

படிப்பதனால் மட்டும் பயன் பெற முடியாது. மொழிப் பயிற்சியைப் பெறுவோம். நல்ல சுலோகங்களை ஒப்பு விக்கலாம், மந்திரங்களைத் தவறின்றி உச்சரிக்கலாம்; அவ்வளவுதான். எந்த விஷயங்களில்ஆசை செலுத்து கிறோமோ அவைதான் நம்மை உயர்த்துகின்றன. அல்லது தாழ்த்துகின்றன.

206

தன்னுடைய உள்ளத்தைத் தூய நிலையில் வைத்துக் கொண்டு, பிறரிடம் உள்ள குற்றங்களை அருள் கண்ணால் பார்க்க வேண்டும்.

207

பெண்கள் துணையின்றித் தெருவிலும் மற்ற இடங்களி

லும் பயமில்லமால் செல்லும் நிலைமை ஏற்பட்டு வந்தால் தான் அந்தச் சமூகம் பண்பட்ட ஜாதியாக மதிக்கப்படும். உயர் நிலை நாகரீகத்துக்கு இதுவே அடையாளம்.

208

ஆண் மக்களின் உள்ளமும் உணர்ச்சியும் சுத்தமாக இருப்பின் பெண்கள் உள்ளத்தில் பயம் உண்டாகாது. முகமும் கண்ணும் உள்ளத்திலே தோன்றும் உணர்ச்சியை உடனே காட்டும்.

209

ஹரிஜனங்கள் அனுபவிக்கும் சமூக இடையூறுகள் யாவற்றையும் 'சட்டத்தின் கட்டாயம்' மூலமே நீக்கி விடுவது என்பது சுலபமல்ல. சட்டங்கள் மூலம் பாதையைத் திறந்து காட்டலாம். சமூகப் பழக்கங்களைப் பற்றிய கோளாறுகளை சட்டத்தின் மூலம் சாதித்துவிட முடியாது. "சட்டம் இயற்றிவிட்டார்கள்; ஆனால் அதனால் பலன் ஏற்படவில்லையே" என்று குறை கூறுவது சரியான மனப்பான்மையல்ல.

210

"தீண்டாமை" என்பது எவ்வித சமூகத் துவேஷம் காரணமாகவும் ஏற்பட்டதல்ல; அது நெடு நாட்பட்ட ஒரு பழக்கமாக ஆரம்பமே தெரியாத ஒரு பழக்கமாக இருந்துவிட்டது.

211

எவ்வளவு பணமிருந்தாலும் சமூக ரீதியாக தாழ்ந்து கிடந்தால் மனதில் உண்மையான சந்தோஷம் இருக்க முடியாது. ஏனென்றால் சந்தோஷம் என்பது மனதைப் பற்றியது; பொருள் பற்றிய தல்ல.

212

மாறுதல் "வெறுமனே" "காலப் போக்கில்" நடந்து

விட்டதாக எண்ண வேண்டாம். அதாவது கடிகாரம் "டக் டக்" என்று அடித்துக் கொண்டிருந்ததுதான் மாறுதலுக்குக் காரணமாக இல்லை. இந்தியா போன்ற ஒரு நாட்டில் இதுபோன்ற விஷயங்கள் சாதாரணமாகக் காலப் போக்கில் மாறிவிடுவதில்லை. மனித முயற்சியால், நேரிய சிந்தனையால், விடாமுயற்சியால் தான் மாறுதல்கள் ஏற்படுகின்றன. சென்ற 40 அல்லது 50 ஆண்டுகளில் ஹரிஜன முன்னேற்றத்துக்காக எவ்வளவோ காரியங்கள் நடந்திருக்கின்றன, என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

213

வறுமை நீங்குவது என்பது நமது தேசத்தின் வேலைகளையும், தனி நபர் முயற்சியையும் ஓரளவு பொறுத்திருக்கிறது.

214

நன்றியறிவித்தல் என்பது மேலும் உதவியை எதிர்பார்க்கும் ஒரு மனோபாவமே என்பார்கள்.

215

ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தை மறந்துவிடுவது மனித சுபாவம். உதாரணமாக துக்கத்தைவிட சந்தோஷத்தைச் சீக்கிரமாக மறந்துவிடுவது சகஜம். துன்பம் பற்றிய உணர்ச்சிதான் நாட்பட நீடித்து மனதில் நிற்கிறது. இது எல்லா விஷயங்களிலும் பொருந்தும்.

216

அவன் அருள் இருந்தால்தான் மீள்வோம் என்பது உண்மையாயினும், நாமும் எத்தனமின்றிச் சும்மா இருக்கக் கூடாது. அருள் என்பது கடற்காற்றைப் போல். காற்று வீசிக்கொண்டே இருக்கிறது. ஆயினும் அந்தக் காற்றை பயன்படுத்துவதற்காகப் படகுக்காரர்கள் பாய் விரித்தாலன்றிப் படகு செல்லாது. நம்முடைய உள்ளங்களாகிய பாய்களைச் சரியாக விரித்து, வீசுகின்ற அவன் அருளைப் பயன்படுத்திக் கொள்வோமாக.

217

அடக்கம் ஒரு சாதனம் மட்டும் அல்ல. உண்மையில் நாமும் நம்முடைய செல்வமோ அறிவோ மற்ற பாக்கியமோ எம்மாத்திரம்? ஒன்றுமில்லை. அஞ்ஞானத்தினின்றும் விலகினோமானால் உண்மையே அடக்கத்தைத் தரும்.

218

சுயசரிதங்கள் எல்லோருமே எழுதுகிறார்கள். ஆனால் நல்ல விஷயங்களை மட்டும் பொறுக்கி எழுதிவிட்டு ஆகாத விஷயங்களைச் சரிப்படுத்தியும் மறைத்துவிட்டும் எழுது கிறார்கள். உண்மையை முற்றிலும் எழுத ஆரம்பித்தால் எத்தனை மகாபாபச் செயல்களைச் செய்ய எண்ணினோம்; அதைப் பகவான் எப்படியோ தடுத்து நம்மைப் பாபத்தி னின்றும் தப்புவித்தான் என்பதை எல்லோருடைய வாழ்க் கைச் சரித்திரத்திலும் காணலாம்.

219

ஆண்டவன் பேரருளால் பாபங்களினின்றும் தப்பு கிறோம். அவன் அருள் இல்லாவிட்டால் மிகப்புகழும்பேரும் பெற்ற பெரியோர்களுடைய கதியும் அதோ கதியா யிருக்கும்.

220

உலக வாழ்க்கையில் நாம் செய்ய வேண்டியதாக ஏற் படும் வேலைகளில் ஒருவேலை உயர்ந்தது. ஒரு வேலை தாழ்ந் தது என்றில்லை. எந்த வேலையுல் ஒன்றே, வித்தியாச மில்லை,

221

கடலில் திசை காட்டும் துருவமுள்ளைச் சரியாக வைத் துக் கொண்டிருக்கும் வரையில் கப்பலுக்கு அபாயமில்லை. காந்தமுள் எப்போதும் துருவத்தை நோக்குவதைப்போல் மனம் இடைவிடாமல் ஆண்டவனை நோக்கியே நின்றால் வாழ்க்கை என்னும் கப்பல் கரையைப் போய்ச்சேரும். பயமில்லை.

222

புகழுக்காகப் பக்தியும் பூஜையும் செய்பவனுடைய பக்தியும் பூஜையும் உண்மை பக்தி அல்ல; உண்மைப் பூஜையும்அல்ல. மௌனமும் தனிமையுமான பக்தியேபக்தி.

223

மலையருவியானது பாறைகளிடையில் குதித்து ஓடி, பிறகு கம்பீர நதியாக அகன்று செல்கிறது; பக்தன் இதயமும் அவ்வாறே. துன்பமும், தடையும், ஐயமும் தாண்டிப் பிறகு உறுதி அடைகிறது. அவ்வப்போது நேரிடும் கவலையும் கலக்கமும் எளிதில் தீர்ந்து போய்ச் சமநிலை அடைகிறது.

224

அவரவர்கள் வழக்கம் அவரவர்களுக்குச் சுவர்க்கம். நல்ல சகவாசமும் நல்ல பழக்க வழக்கங்களும் இல்லாமற் போனால் துன்மார்க்கமே மேன்மையாகத் தோன்றும்.

225

பொய்யும் புனைச் சுருட்டுமே பலன் தரும் என்று எண்ணி எண்ணி அதுவே வழக்கப்பட்டுப் போயிருக்கிற படியால் தருமோபதேசங்களை, 'இதுவெல்லாம் என்ன பிரயோசனம்' என்று தள்ளிவிடுவது உலகத்தார் வழக்கம். ஆயினும் உய்யும் வழி இது அல்ல.

226

தருமமே சுகம், தருமமே சந்தோஷம், தருமமே சாதுரியம், தருமமே செல்வம். தருமம் கெட்டால் நாடு செழிக்காது. எல்லோரும் தரித்திர நிலை அடைவார்கள். மோசமும் பித்தலாட்டமும் சமுதாயத்தை நாசம் செய்துவிடும். சமுதாயம் கெட்டால் அனைவரும் கெடுவோம்.

227

உள்ளத்தைச் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டு அதில் அழுக்குச் சேராமல் வைத்துக்கொண்டால் எதையும் செய்ய முடியும்.

228

வண்ணான் வீட்டிலிருந்து வந்த புதுத் துணிக்கு எந்தச் சாயமும் ஏற்றிவிட முடியும். அந்தத் துணியைப் போன்றதுதான் மனமும். நல்ல சகவாசமும் முயற்சியும் இருந்தால் அதை நல்வழிக்குத் திருப்பலாம்.

229

பற்றுகளையும் ஆசைகளையும் குறைத்துக்கொண்டே போகவேண்டும். அவை வளர்ந்தால் விவேகம் வளராது. பூண்டு வளர இடம் கொடுத்துவிட்டால் பயிருக்குச் சேதம்; களை பிடுங்கினால் பயிர் நன்றாக வளரும். இல்லாவிட்டால் பயிர் அழிந்து வயல் காடாகிப் போகும். அப்படியே விவேகமும். ஆசைகளையும் பற்றுகளையும் குறைத்துக் கொள்ளாமற் போனால் விவேகம் வளராது.

230

சந்தைக்கு வெளியிலே பெரிய இரைச்சல் கேட்கும். அது என்ன சத்தம் என்று கேட்டால் "சந்தைக் கூச்சல்" என்போம். ஆனால் சந்தைக்குள்ளே பிரவேசித்து விட்டால் இரைச்சல் காதில் படாது. பண்டத்தின் விலை கேட்பதிலும் வியாபாரம் முடிப்பதிலும் கவனம் செலுத்துகிறோம். இப்படியேதான் பக்தியும். தொலைவில் நிற்கும் போது, வாதங்களின் இரைச்சல் அதிகமாக இருக்கும். பகவானை அண்டிப் பக்கத்தில் நெருங்கியதும் வாதங்களின் சத்தம் அடங்கிப் பகவானிடத்தில் லயித்து விடுவோம்.

231

ஆண் மக்களைக் கண்டால், பெண்கள் இயற்கையாகக் கூச்சப்படலாம். ஆனால் கூச்சம் வேறு; அச்சம் வேறு. தாம் அறியாத அன்னிய ஆண்மக்களைப் பற்றி அதே தேசத்தைச் சேர்ந்த பெண்மக்கள் ஏன் அச்சப்படவேண்டும்? ஆண் மக்களின் உள்ளமும் உணர்ச்சியும் சுத்தமாக இருப்பின் பெண்கள் உள்ளத்தில் பயம் உண்டாகாது. முகமும் கண்ணும் உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சியை

உடனே காட்டும். ஆண் மக்கள் முகத்திலும் கண்ணிலும் தோன்றும் குறிப்புகளைப் பார்த்துத்தான் சகோதரிகள் பயப்படுகிறார்கள்.

232

பள்ளிகளில் கூடிப் பயிலும் மாணவர்களே! மூளையைப் பெருக்கும் உங்கள் நன் முயற்சிகளில் இதையும் சேர்த்துக் கொள்ளுங்கள். மனத் துப்புரவு உங்களுக்கு மிகவும் முக்கியம். துப்புரவு என்பது உடலும் உடுப்பும் சுத்தமாக வைத்துக்கொள்வது மட்டுமல்ல. எல்லாப் படிப்பையும்விட முக்கியமான படிப்பு மனதில் பசுதர்மக் கவர்ச்சிப் பேய் குடிகொள்ளாமல் உள்ளத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்ளப் பயில்வதாகும்.

233

ஒரு பாம்பையோ புலியையோ கண்டோமானால் உடல் நடுங்குகிறது. புலன் வழியாக அடைந்த அறிவு உடலை எல்லாம் ஆட்டி விடுகிறது. நல்ல ஆகாரத்தைப் பசி வேளையில் ஒருவன் கண்டால் அவன் வாயில் தண்ணீர் ஊறுகிறது. ஆகார உண்மையானது உயிரோடும் உடலோடும் ஒட்டி வேலை செய்கிறது.

234

வீடு கட்டும்போது சாரம் கட்டி அதன்மேல் நின்று வேலைக்காரர்கள் கட்டிட வேலை செய்வார்கள். வீடு கட்டி முடிந்ததும் சாரத்திற்கு வேலை இல்லை. நல்ல ஞானம் அடைந்தவர்களுக்குக் கோயிலும், குளமும் வேண்டியதில்லை. தியானத்தில் மனதை அலையாமல் நிறுத்தப் பயிலாதவர்களுக்குப் பூஜையும் ஸ்நானமும் அவசியமாகும்.

235

வெளிப்படையான சுயலாபத்துக்கோ, அல்லது மனசில் புகழாசை பொதிந்தோ, வேலையில் ஈடுபட்டால் அது சேவையாகாது. தேசசேவை செய்த உத்தமர்கள் புகழும் பெயரும் அடைந்திருக்கிறார்கள் என்பது உண்மை. ஆனால்,

அவ்வாறு புகழடைந்தவர்கள் அதற்காக வேலையில் பு
வில்லை. அவர்களுடைய புகழின் ரகசியமும், வெற்றிக்கு
காரணமும் புகழை எதிர்பார்க்காமல் வேலை செய்தே
யாகும். இதை உணராமல் அவர்களைப் போல் நாமு
புகழ் பெறலாம் என்ற ஆசையோடு ஆரம்பித்தவர்கள்
தோல்வியும் ஏமாற்றமும் அடைவதை அடிக்கடி பார்க்
சேர்த்தும்.

மிகவும்

236

சுத்தமா ஒரு ஆசையுமில்லாமல் மனிதன் எப்படிப் பொதுப்
படிப்ணி செய்யமுடியும் என்று சிலர் ஐயப்படலாம். அ
கவர்சிற ஐயப்படுகிறவர்கள் தங்கள் குடும்பக் காரியங்களை
வைத்டும் கவனித்துக்கொண்டு யோக்கியமாகக் சொந்த
ாழ்க்கை நடத்திக்கொண்டிருத்தலே போதிய தேச
சேவையாகும். பொதுநலப் பணியில் பிரவேசித்து ஏமாற்ற
நடுமும் அருவருப்பும் அடைய வேண்டியதில்லை.

237

இல்லறம் நடத்துங்கள். ஆனல் ஒரு கையா
வாழ்க்கைக் கடமைகளைச் செய்துகொண்டு ஒரு கை
வான் காலைப் பிடித்துக் கொண்டே இருக்க வேண்டு
வேலை செய்யாமலிருக்கும் போது இரண்டு கைகளு
ஆண்டவன் பாதங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொ
டிருக்கப் பயன்பட வேண்டும்.

238

உள்ளத்தைப் பக்குவப்படுத்திக் கொள்ளுவதற்கு
குடும்ப வாழ்க்கையை ஒரு பயிற்சிக் களமாகப் பாவித்து
கொண்டு இல்லறம் நடத்துங்கள்.

239

தகப்பனேடோ, மனைவியுடனே சண்டைபிடித்து
கொண்டு அதற்காகத் துறவுபூண்டால், அது உண்மை
யான சந்நியாசமாகாது. அந்தத் துறவு வெறுப்புத் தம்
வாகும். அது நிலைக்காது. வெகு சீக்கிரத்தில் அப்பல்,

ட்ட துறவியின் மனம் பழைய விஷயங்களில் சென்று றுபடி உலக வாழ்க்கை ஆரம்பமாகும்.

240

ஹிந்துக் கோவில்களில் செல்லாமல் கிறிஸ்துவர்களுக்கும் மூஸ்லீம்களுக்கும் தடை விதிப்பதைவிட பக்தியில்லாதவர்களை இவ்விடம் அனுமதிக்காமலிருப்பது நல்லது என்றே ய தோன்றுகிறது. ளுக்கு

241 ஒப்பும்

இயற்கை ஆசைகளே உயிர் அமைப்பின் வேக மூல்லாப் தேகமும் உள்ளமும் வளர்ந்து முதிர்வதெல்லாம் ஆ கர்மக் ங்களின் வேலைதான். பிரகிருதி அமைப்பு இதமாக த ச இல்லாமற்போனால் வளர்ச்சி இல்லை. வளர்ச் மற்போனால் உயிர் நோய் வாய்ப்படும். ஆனபடியா வேகங்களுக்குச் செல்ல வழிகள் சரியாக வகுத்துக் க்க வேண்டும். அப்படிச் செய்யாமற்போனால் பத்து மூன்று வீதம் வேகங்கள் கோணல் மார்க்கங்களில் றவிடும்; அதுதான் குடும்பங்களின் துக்கங்களுக்குக் ணம். இந்த அபாயத்தைக் கவனிப்பது பெற்றோர் ன் கடமை. இதைவிடச் சிறந்த தேசத்தொண்டோ க சேவையோ வேறு இல்லை. குடும்பங்களின் தொகு ய தேசம், சமூகம் எல்லாம்.

242

மனிதனுடைய உள்ளம் ஒரு விசித்திரம். அது வளர் தும் மாறுவதும் ஆண்டவனின் விளையாட்டு, அடுப்புக் யும் பளபளவென்று மின்னும் வைரக்கல்லும் ஒரே ருள் என்று ரசாயனப் பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். பொருள், அதன் அணு அமைப்புக் கொஞ்சம் மாறி ால் வேறு பொருளாகிவிடுகிறது. பொருளே மாறும் சிழுது ஒரு மனிதனுடைய குணங்கள் மாறுவதில் என்ன ப்பு?

பெ